# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தை
ஜனவரி — 1980




விலை ரூ. 1-20

ஸ்ரீராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர் :: சென்னை-600 00

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## ஸ்பெஷல் தரிசனத்திற்கு நுழைவுச்சீட்டு விற்பனை

திருமலையில் ஸர்வதரிசன க்யூவில் நின்று பக்தர்கள் ஸ்ரீவேங்கடேசுவரரைக் கட்டணமின்றித் தரிசிக்கலாம். உடல்நலமின்மையாலோ, போதிய நேரமின்மையாலோ வேறு ஏதாவது காரணங்களினாலோ ஸர்வ தரிசனக் கயூவில் காத்திருந்து பகவானைத் தரிசிக்க இயலாதவர்கள், நபர் ஒருவருக்கு ரூ. 25 செலுத்தி விரைவில் ஸ்ரீவேங்கடேசுவரரைத் தரிசிக்கத் திருமலை திருப்பதி தேவஸ்தானம் வசதி செய்து தருகிறது. இது வரையிலும் இந்த ஸ்பெஷல் தர்சன நுழைவுச் சீட்டுகள் திருமலைக் கோவிலின் எதிரிலுள்ள விஜயா பேங்கில் மட்டுமே விற்பனை செய்யப்பட்டு வந்தன.

1979 மார்ச் மாதம் முதல் தேதியிலிருந்து மேற்கண்ட நுழைவுச் சீட்டுகளை நாடெங்கிலும் உள்ள ஆந்திரா பேங்க் கிளைகளிலும்கூட முன்னதாகவே விற்பனைக்குப் பெற்றுக் கொள்ளத் திருமலை திருப்பதி தேவஸ்தானம் ஏற்பாடு செய்திருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த ஸ்பெஷல் தரிசன நுழைவுச் சீட்டு வைத்திருப்பவர்கள் எந்தச் சமயத்தில் வேண்டுமானாலும் பெரிய நுழைவாயிலில் (மஹா துவாரத்தில்) நுழைந்து ஸர்வ தர்சன க்யூவில் கலந்து கொண்டு, நீண்ட நேரம் காத்திருக்க வேண்டிய அவசியமில்லாமல் ஸ்ரீவேங்கடேசப் பெருமாளைத் தரிசிக்கலாம்.

**எக்ஸிக்யுட்டிவ் ஆபீசர்**
**திருமலை திருப்பதி தேவஸ்தானம்**
**திருப்பதி**

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—60 | ஜனவரி 1980 | இதழ்—1

## பொருளடக்கம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண—விவேகானந்த அன்பர்களுக்கு ஓர் அழைப்பு

ஸ்ரீராமகிருஷ்ண மடம்—சங்கம் ஆகியவற்றின் இரண்டாவது மாநாடு 1980 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் பெரிய அளவில் பேலூரில் நடைபெற இருக்கிறது. உலகின் பல பாகங்களிலிருந்தும் அன்பர்கள் இந்த மாநாட்டில் கலந்துகொள்ள இருக்கிறார்கள். அதுபோன்று சிறிய அளவில், குறிப்பாகத் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களுக்காக சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் ஒரு மாநாடு நடத்த இருக்கிறது. இந்தப் பொதுக் கூட்டம் 1980 மார்ச் மாதம் 8-ஆம் தேதி சனிக்கிழமை சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் நடைபெற இருக்கிறது.

தமிழகத்தின் பல இடங்களில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் பெயரால் அன்பர்கள் பல அமைப்புகளை நடத்தி வருகிறார்கள். இவ்விதம் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் பெயரால் இயங்கிவரும் பல தனி ஸ்தாபனங்களோடு தாய் ஸ்தாபனமாகிய ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் நெருங்கிய தொடர்பு கொண்டு அந்த ஸ்தாபனங்களை ஊக்குவிக்க வேண்டும் என்பதே இந்தப் பொதுக் கூட்டத்தின் முக்கிய நோக்கமாகும்

தமிழ்நாட்டின் பல பாகங்களிலுமுள்ள ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த அன்பர்கள் நேரில் சந்திப்பதன் மூலம் ஒருவருக்கொருவர் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவும், சகோதரத்துவத்தை வளப்படுத்திக் கொள்ளவும் இப்பொதுக் கூட்டம் ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரிடம் ஆழ்ந்த பக்தியும், அவர்களின் கருத்துக்களைப் பிறரும் அறியச் செய்ய வேண்டும் என்ற ஆர்வமும் கொண்ட அன்பர்கள் மட்டுமே இதில் கலந்து கொள்வார்கள்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், அன்னை ஸ்ரீ சாரதாதேவியார், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் பெயரால் இயங்கிவரும் மன்றங்கள், சங்கங்கள், சமிதிகள் போன்ற அமைப்புகளை நடத்தி வருபவர்கள், அந்த அமைப்புகளுடன் தொடர்பு கொண்டுள்ள அன்பர்கள் ஆகியோர் அனைவரையும் இப்பொதுக் கூட்டத்தில் கலந்துகொள்ள வரவேற்கிறோம்.

பொதுக் கூட்டம் காலையில் துவங்கி இரவு எட்டு மணிவரை நடைபெறும். இதில் கலந்துகொள்ளும் அன்பர்கள் தங்குவதற்கும் உணவிற்கும் மடத்தின் சார்பாக ஏற்பாடு செய்யப்படும்.

அவ்வமயம் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் - சங்கம் ஆகியவற்றின் தலைவர் ஸ்ரீ மத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் சென்னை மடத்தில் இருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 8—3—80 மாலை திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களின் உபந்நியாசமும் மடத்தில் நடைபெறும்.

இந்த விழாவில் கலந்துகொள்ளும் அன்பர்கள் நபர் ஒருவருக்கு உணவிற்கு ரூ. 10ம் உறுப்பினர் கட்டணமாக ரூ.5ம் செலுத்த வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டுள்ளது. உணவிற்கும் தங்குமிடத்திற்கும் தாங்களே ஏற்பாடு செய்து கொள்பவர்கள் உறுப்பினர் கட்டணம் ரூ. 5 மட்டும் செலுத்தினால் போதுமானது.

இந்தப் பொதுக் கூட்டத்தில் கலந்து கொள்ள விரும்பும் அன்பர்கள் 1980 பிப்ரவரி 20 ஆம் தேதிக்குள் கடிதம் எழுதித் தகவல் தெரிவிக்கக் கோருகிறோம்.

ஸ்ரீ குருதேவரின் தொண்டில்
சுவாமி தன்மயானந்தர்
ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை-600 004



# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

| தொகுதி 60 | சித்தார்த்தி ஹு தை மீ | இதழ் 1 |
|---|---|---|




प्रातर्नमामि तमसः परमर्कवर्णम्, पूर्णं सनातनपदं पुरुषोत्तमाख्यम् ।
यस्मिन्निदं जगदशेषमशेषमूर्तौ रज्ज्वां भुजङ्गम इव प्रतिभासितं वै ॥

பிராதர் நமாமி தமஸ: பரமர்க்கவர்ணம்
பூர்ணம் ஸநாதனபதம் புருஷோத்தமாக்யம் |
யஸ்மின் இதம் ஜகதசேஷமசேஷமூர்த்தௌ
ரஜ்வாம் புஜங்கம இவ ப்ரதிபாஸிதம் வை ||

எவர் பூர்ணரோ, புருஷோத்தமரோ, என்றும் இருப்பவரோ, தூயரோ, பேரொளி பொருந்தியவரோ, எவருடைய எல்லையற்ற சூரிய ஒளியினால் இருளெல்லாம் பட்டு மறைகிறதோ, பாம்பு என்ற மயக்கத்தை உண்டாக்கும் கயிற்றைப் போன்ற இந்த உலகம் முழுவதும் எவரிடம் அடங்கி நிற்கிறதோ, அந்தத் தேவரே நமக்குக் கதி என்று நாம் விடும் ஒவ்வொரு முச்சிலும் நம்பி இடையறாது வணங்குவோமாக.

பொங்குபல சமயமெனும் நதிக ளெல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி ஓங்கும்
கங்குகரை காணாத கடலே எங்கும்
கண்ணாகக் காண்கின்ற கதியே அன்பர்
தங்கநிழல் பரப்பிமயல் சோடை யெல்லாம்
தணிக்கின்ற தருவேபூந் தடமே ஞானச்
செங்குமுத மலரவரு மதியே எல்லாம்
செய்ய வல்ல கடவுளே தேவதேவே.

—வடலூர் வள்ளலார்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**திங்கட்கிழமை, அக்டோபர் 20, 1884**

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** இறைவனை நீ மகிழ்வித்தால் எல்லோரும் மகிழ்ச்சி அடைவார்கள். மகாத்மாக்களின் உள்ளத்தில் கடவுள் ஒருவரே வீற்றிருக்கிறார்.

**குடும்பத்தின் தலைவர் :** கடவுளை அடைந்து விட்டால் பிறகு வேறு என்ன வேண்டும்? கடவுளை யாரேனும் ஒருவன் அடைவானானால் அப்போதே மற்ற எல்லாவற்றையும் விட்டுவிடுகிறான். ஒரு ரூபாயைப் பெற்றுவிட்டால் பிறகு சில்லறையில் மகிழ்ச்சி போய்விடுகிறது.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** சிறிதளவு ஆத்மசாதனை அவசியம். பழகப் பழக மெல்ல மெல்ல ஒருவன் தெய்விக ஆனந்தத்தை அடைகிறான். உதாரணமாக, பூமியின் மிக ஆழத்தில் ஒரு குடம் நிறையச் செல்வம் புதைந்திருப்பதாக வைத்துக்கொள்வோம். அதைப் பெற ஆவல் கொண்டவன் பூமியைத் தோண்டும் சிரமத்தை மேற்கொள்ள வேண்டும். அந்த முயற்சியில் அவனுக்கு உடல் வேர்த்துக் கொட்டுகிறது. நீண்ட நேரம் இவ்விதம் தோண்டிய பிறகு மண்வெட்டி குடத்தின் விளிம்பில்பட்டு 'டொங்' என்ற சப்தம் கேட்கிறது. அந்தச் சப்தத்தைக் கேட்டவுடனே அவனுக்கு ஆனந்தம் ஏற்படுகிறது. மண்வெட்டி குடத்தின்மீது பட்டு எவ்வளவுக்கு எவ்வளவு அந்தச் சப்தம் ஏற்படுகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் அதிக மகிழ்ச்சியை அடைகிறான்.

ஸ்ரீராமபிரானிடம் தொடர்ந்து பிரார்த்தனை செய். அவரையே தியானம் செய். ஸ்ரீராமபிரானே உனக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் நிச்சயம் செய்து கொடுப்பார்.

**குடும்பத்தின் தலைவர் :** சுவாமி, தாங்களே ஸ்ரீராமபிரான் ஆவீர்கள்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** அது என்ன அப்படிப் பேசுகிறாய்? அலைகள் ஆற்றுக்குச் சொந்தமானவை. ஆறு எப்படி அலைகளுக்குச் சொந்தமாகும்?

**குடும்பத்தின் தலைவர் :** ஸ்ரீராமபிரான் மகாத்மாக்களின் உள்ளத்தில்தான் கோவில் கொண்டிருக்கிறார். அவரை நாம் வேறு எந்த விதத்திலும் பார்க்க முடியாதே. மேலும், இப்போது கடவுளின் அவதாரம் இல்லையே.

**ஸ்ரீராமகிருஷ்னர் :** (புன்முறுவலுடன்) கடவுளின் அவதாரம் இப்போது இல்லை என்று நீ எப்படித் தெரிந்துகொண்டாய்?

குடும்பத்தின் தலைவர் மௌனமாக இருந்தார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** அவதார புருஷரை எல்லோராலும் அறிந்து கொள்ள முடியாது. நாரதர் ஸ்ரீராமபிரானைத் தரிசிக்கச் சென்றார். அப்போது இராமர் நாரதருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, ''நாங்கள் இல்லற வாழ்க்கையில் இருப்பவர்கள். தங்களைப் போன்ற சாதுக்கள் எங்களிடம் வராவிட்டால் நாங்கள் எப்படித் தூய்மை பெற முடியும்?'' என்று சொன்னார். அதன்பிறகு அவர் தந்தையின் வாக்கை நிறைவேற்ற வனவாசம் சென்றார். அந்தக் காட்டிலிருந்த ரிஷிகள், ஸ்ரீராமர் வனவாசத்தை மேற்கொண்டிருக்கிறார் என்பதை அறிந்ததிலிருந்து சாப்பிடாமலே பட்டினி இருந்தார்கள். அவர்களில் பலருக்கு ஸ்ரீராமபிரான் சாட்சாத் பரப்பிரம்மமே ஆவார் என்பது தெரியாது.

**குடும்பத்தின் தலைவர் :** தாங்களே அந்த இராமபிரான்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** ராம ராமா! இந்த மாதிரி பேசவே பேசாதே!

ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்விதம் சொல்லிக்கொண்டே குடும்பத்தின் தலைவரைக் கைகூப்பி வணங்கி, ''அந்த இராமபிரான் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் வீற்றிருக்கிறார். அவரே இந்தப் பிரபஞ்சம் முழுவதும் வியாபித்திருக்கிறார். அவரே இந்த உலகைப் பரிபாலிக்கிறார். நான் உங்களுடைய அடிமை. அந்த இராமபிரானே இந்த மனிதர்கள், உயிரினம் ஆகிய எல்லாமுமாக ஆகியிருக்கிறார்'' என்று கூறினார்.

குடும்பத்தின் தலைவர் : ஆனால் ஐயனே, எங்களுக்கு அது தெரியாது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : உங்களுக்குத் தெரிந்திருந்தாலும் சரி, தெரியாமல் இருந்தாலும் சரி, நீங்கள் அந்த இராமபிரான்தான்.

குடும்பத்தின் தலைவர் : நீங்கள் விருப்பு வெறுப்பிலிருந்து விடுபட்டிருக்கிறீர்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : அது எப்படி? ஒரு குதிரை வண்டிக்காரன் என்னைக் கல்கத்தாவிற்கு அழைத்து வர ஒப்புக்கொண்டிருந்தான். அவனுக்கு முன் பணமாக நான் 3 அணா கொடுத்திருந்தேன். ஆனால் அவன் வரவே இல்லை. அதனால் அவன்மீது எனக்கு மிகவும் கோபம் வந்தது. அவன் மிகவும் மோசம்! எனக்கு எவ்வளவு துன்பம் கொடுத்தான்!

இன்று ஸ்ரீமயூரமுகுடரின் (கிருஷ்ணரின்) திருவிழாவாகும். பக்தர்கள் பூஜைக்கும் நைவேத்தியத்திற்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். அவர்கள் ஸ்ரீமயூரமுகுடரைத் தரிசிக்க, குருதேவரை அழைத்துச் சென்றனர். மயூரமுகுடரைத் தரிசித்து, குருதேவர் வணங்கினார். நிவேதனமாகியிருந்த சில மலர்களை அவர் தமது தலையில் சூடிக்கொண்டார்.

ஸ்ரீமயூரமுகுடரின் விக்கிரகத்தைத் தரிசித்த பின்பு குருதேவர் பாவநிலையில் ஆழ்ந்தார். அந்த நிலையில் கூப்பிய கைகளுடன் நின்றபடியே அவர், ''ஹா கோவிந்தா! நீயே என் பிராணன்! நீ என் உயிர்! ஜய கோவிந்தா, ஜய கோவிந்தா, கோவிந்த சச்சிதானந்தமயம்! ஹா கண்ணா! ஹே கண்ணா! கண்ணனே ஞானம். கண்ணனே மனம். பிராணன் கண்ணன், ஆத்மா கிருஷ்ணன், உடல் கிருஷ்ணன். ஜாதி கிருஷ்ணன், குலம் கிருஷ்ணன். ஹே கிருஷ்ணா! நீயே என் பிராண,ன் நீயே என் உயிர்!'' என்றார்.

இவ்விதம் சொல்லிக்கொண்டிருந்தபோதே குருதேவர் நின்ற நிலையிலேயே சமாதி அடைந்தார். அவரை ஸ்ரீராம் சட்டர்ஜி தாங்கிப் பிடித்துக்கொண்டார். நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவரின் சமாதி கலைந்தது.

குருதேவர் பக்தர்களிடம் விடைபெற்றுக் கொண்டு வண்டியில் புறப்பட்டார். அவருடன் பாபுராம், ம-, ராம் சட்டர்ஜி, சிறிய கோபால் ஆகியோரும் வண்டியில் அமர்ந்துகொண்டனர்.

ஒரு பிச்சைக்காரி கையில் குழந்தையுடன் வண்டியின் அருகில் வந்து பிச்சை கேட்டாள். அதைப் பார்த்ததும் குருதேவர் ம-விடம், ''உன்னிடம் சில்லறை ஏதாவது இருக்கிறதா?'' என்று கேட்டார். கோபால் பிச்சைக்காரிக்குக் காசு கொடுத்தார்.

குருதேவர் இருந்த வண்டி வாசனைப் பொருள்கள் விற்கும் கடையின் அருகில் வந்தது. குருதேவர் ஐந்து வயதுச் சிறுவனைப் போல அங்கிருந்த படங்கள், பொருள்கள் ஆகியவற்றைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தார். சாலையின் நான்கு புறமும் ஒரே சப்தமாக இருந்தது.

குருதேவர், ''இன்னும் சற்றுத் தொலைவில் சென்று பார்!'' என்று உரத்தகுரலில் சொன்னபடி சிரித்தார். அவர் பெருஞ்சிரிப்புடன் பாபுராமிடம், ''இன்னும் சற்று மேல்நோக்கிப் போ. நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்றார். பக்தர்களும் அவருடன் சேர்ந்து சிரித்தனர். ''இறைவனை நோக்கி முன்னேறிச் செல். இப்போதைய உனது நிலையில் மனநிறைவு அடைந்து பின்தங்கிவிடாதே. பிரம்மசாரி விறகுவெட்டியிடம் முன்னேறிச் செல்லும்படி கூறினார். விறகுவெட்டி முன்னேறிச் சென்று, முதலில் சந்தனமரம் கொண்ட காட்டையும் சில நாட்களுக்குப் பிறகு மேலும் முன்னேறிச் சென்று வெள்ளிச் சுரங்கம், மேலும் முன்னேறிச் தங்கச் சுரங்கம், கடைசியாக முத்து மாணிக்கம் ஆகியவற்றைக் கண்டான்! ஆகவேதான் குருதேவர் மீண்டும் மீண்டும் 'ஆன்மிக வாழ்க்கையில் முன்னேறிச் செல், முன்னேறிச் செல்' என்று கூறுகிறார்'' என்று குருதேவர் சொல்ல விரும்பிய கருத்தை உடன் இருந்த பக்தர்கள் புரிந்துகொண்டனர்.

வண்டி நகரத் தொடங்கியது. குருதேவருக்காக ம— வாங்கி வந்திருந்த துணிகளைக் குருதேவர் கவனித்தார். அவற்றுள் இரண்டு சாதாரணத் துண்டுகளும் இரண்டு வெளுத்த துண்டுகளும் இருந்தன. இரண்டு சாதாரணத் துண்டுகளை மட்டும் வாங்கும்படி குருதேவர் ம—விடம் சொல்லியிருந்தார். ''சாதாரணத் துண்டுகள் இரண்டையும்

என்னிடம் கொடு. மற்றதை நீ எடுத்துச் சென்று உனக்காக வைத்துக்கொள். சரி, வேண்டுமானால் ஒரு துண்டை எனக்குக் கொடு '' என்று குருதேவர் ம— விடம் கூறினார்.

ம :— ஐயனே, ஒரு துண்டை நான் திரும்பவும் எடுத்துக்கொண்டு போகத்தான் வேண்டுமா?

ஸ்ரீராமகிருஷ்ணர் : அப்படியானால் இரண்டையுமே எடுத்துக்கொண்டு போ.

ம :— தங்கள் விருப்பப்படி செய்யுங்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் . எனக்குத் தேவைப்படும் போது திரும்பவும் நீ வாங்கித் தருவாய். நேற்று வேணிபால் ராம்லாலுக்காகச் சிறிது உணவை என்னுடன் வண்டியில் அனுப்பக் கொண்டு வந்ததை நீ பார்த்தாய் அல்லவா? என்னுடன் எந்தப் பொருளும் அனுப்பாதே என்று நான் அவனிடம் கூறினேன். என்னால் எந்தப் பொருளையும் எதிர்காலத்திற்கென்று சேர்த்து வைக்க முடிவதில்லை.

ம. நல்லது ஐயனே. அதனால் என்ன? இந்த வெளுத்த துண்டுகள் இரண்டையும் இப்பொழுது நான் எடுத்துச் செல்கிறேன்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்பு ததும்ப) : என் மனதில் ஏதாவது விருப்பம் ஏற்பட்டால் அது உங்களுடைய நன்மைக்காகத்தானே ஏற்படுகிறது? நீங்கள் எனக்கு மிகவும் வேண்டியவர்கள்; எனக்கு ஏதாவது தேவைப்படும்போது நான் உன்னிடம் சொல்கிறேன்.

ம :— (பணிவுடன்) நல்லது ஐயனே.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு பக்தனைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டார் : "'நாளைக்கு நான் படோ பஜாருக்குப் போவதாக இருக்கிறேன்; நீ என்னை அங்கு வந்து பார்' என்று நான் அவனிடம் கூறினேன். அதற்கு அவன் என்ன சொன்னான் தெரியுமா? 'டிராம் டிக்கட்டுக்கு ஓர் அணா செலவாகும். யார் செலவு செய்துகொண்டு போவார்கள்?' என்று கேட்டான்! நேற்று அவன் வேணிபாலரின் தோட்டமாளிகைக்குச் சென்றிருந்தான். அங்கே அந்த வீட்டில் நடைபெற்ற விழாவில் அவன் பூசாரியாகப் பணியாற்றினான். அவ்விதம் அவனைப் பூசாரியாக வேலை செய்யும்படி ஒருவருமே அவனிடம் சொல்லவில்லை. அவனாகவே அப்படிச் செய்தான். தான்பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவன் என்று மக்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்தான் போலும். (ம—விடம்) பார்த்தாயா? இதை என்னவென்று சொல்வது? டிராமுக்கு ஓரணா செலவாகும் என்கிறானே!"

மார்வாடி பக்தர்களின் அன்னக் குவியல் விழாவைப்பற்றிய பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : அந்த மார்வாடிகளுக்கு எவ்வளவு பக்தி இருக்கிறது பார்த்தாயா? இதுதான் இந்துக்களின் உண்மையான மனநிலையாகும். இதுதான் சநாதன தர்மம். தெய்வ விக்கிரகத்தை ஊர்வலமாக எடுத்துச் செல்லும்போது அவர்களிடம் இருந்த ஆனந்தத்தைப் பார்த்தாய் அல்லவா?

இந்துமதம்தான் சநாதன தர்மம். இப்பொழுது நீ எந்த எந்த மதங்களையெல்லாம் பார்க்கிறாயோ அவை எல்லாம் இறைவனின் விருப்பத்தினாலேயே தோன்றியிருக்கின்றன; இறைவனின் விருப்பத்தினாலேயே மறையவும் போகின்றன. அவை என்றென்றைக்குமாக நிலைத்து நிற்கமாட்டா. ஆகவேதான் 'தற்காலப் பக்தர்களின் திருவடிகளுக்கும் நமஸ்காரம்' என்று நான் சொல்கிறேன். இந்து மதம் பழமையானது. எப்போதும் அது இருந்து வந்திருக்கிறது; இனியும் அது என்றென்றைக்குமாக நிலைத்து நிற்கும். ☆

## சுவாமி விபுலானந்தரின் தபால் தலை வெளியிடப் பெற்றது

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையின் முன்னாள் ஆசிரியரும் தமிழ்ப் பேரறிஞருமாகிய ஸ்ரீமத் சுவாமி விபுலானந்தரின் நினைவாக இலங்கை பௌத்த அரசாங்கம் 1979 நவம்பர் 15-ஆம் நாள் தபால் தலை ஒன்றை வெளியிட்டுக் கௌரவித்தது.**




# தெய்வம் தெளிமின்! தெளிந்தோர் பேணுமின்!

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே யுறுதி,
அகத்திலே யன்பினோர் வெள்ளம்,
பொறிகளின் மீது தனியர சாணை,
பொழுதெலாம் நினதுபே ரருளின்
நெறியிலே நாட்டம், கரும யோகத்தின்
நிலைத்திட லென்றிவை யருளாய்,
குறிகுண மேதுமில்ல தாயனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம் பொருளே!

—மகாகவி பாரதியார்

பரமஹம்சதேவராகிய நாதன் தாள் போற்றி, அவரது திருவருளைப் பக்திபூர்வமாக வேண்டிப் பிரார்த்தித்து 'விஜயம்' தனது 60-ஆம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது.

வாசகர்களாகிய பேரன்பிற்குரிய ஆன்மிகச் சகோதர சகோதரிகள் அனைவருக்கும் விஜயம் தனது ஆழ்ந்த அன்பையும் புத்தாண்டு—பொங்கல் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறது. நான்கு திசைகளிலும் அனைவரின் வாழ்க்கையிலும் அன்பும் மகிழ்ச்சியும் பெருகட்டும். மங்களம் தங்கட்டும்.

''அனைவருக்கும் மங்களம் உண்டாகட்டும். அனைவருக்கும் அமைதியும் நிறைவும் உண்டாகட்டும். அனைவரும் நோயற்று இன்ப வாழ்வு வாழட்டும். அனைவரும் நட்புடன் இருக்கட்டும். எங்கும் துன்பம் ஏற்படாதிருக்கட்டும்.''

—ஒரு சுலோகம்

**தெய்வம் தெளிமின்!**

''கடவுள் ஒருவர் உண்டு என்று நம்புங்கள். அவ்விதம் கடவுள் ஒருவர் உண்டு என்று உணர்ந்த பெரியோர்களைப் போற்றுங்கள்'' என்று, தாம் வாழ் நாள் முழுவதும் பெற்ற அனுபவத்தின் பிழிவை 'தெய்வம் தெளிமின்! தெளிந்தோர் பேணுமின்!' என்ற வரிகளில் சிலப்பதிகாரக் காப்பியத்தின் முடிவில் இளங்கோவடிகள் மாணிக்கமணிகள் போன்று பதித்திருக்கிறார். சூத்திரம் போன்று இளங்கோவடிகள் கூறியிருப்பதுவே வாழும் வழியாகும்.

''கடவுளிடம் பக்தி இல்லாததனால்தான் மனிதன் எல்லாவிதத் துன்பங்களுக்கும் ஆளாகிறான்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

அல்லல்கள் நிறைந்த ஸாரமற்ற இந்த உலகில் ஸாரமானவன் இறைவன் ஒருவனே ஆவான். அந்த இறைவனைச் சார்ந்து வாழ்வதுதான் வாழ்க்கையை அர்த்தமுடையதாக்கும். இந்த உலக வாழ்க்கையில் மனநிம்மதியோடு வாழ இதைத்தவிர வேறு வழியே இல்லை. செல்வத்துட் செல்வம் அருட்செல்வமே ஆகும். அதைச் சேர்ப்பவனே உலகில் தான் பிறந்த காரியத்தைச் செய்தவன் ஆவான். அத்தகைய வாழ்க்கை தனிவாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் மலர இறைவனை அனைவரும் பிரார்த்திப்போமாக.

ஜபம், தியானம் போன்ற ஆத்ம சாதனைகளுக்கு அன்றாட வாழ்க்கையில் போதிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டால்தான், இந்த உலக வாழ்க்கையைச் செம்மையாக நடத்த இயலும். இல்லாவிட்டால் சுயநலம் புகுவதையும், மேலும் மேலும் பந்தங்களுக்கு ஆளாவதையும் தவிர்ப்பதற்கில்லை. கபீர் சொல்கிறார்: ''ஒரு இராமனைப் பஜனை செய்யாமல் எல்லாச் சாமர்த்தியமும் முழுகித் தொலைந்தது.''

செய்ய வேண்டிய கடமைகள் எத்தனை இருந்தாலும் ஆத்ம சாதனைக்காகச் சிறிது நேரத்தை ஒதுக்கி வைப்பது ஒவ்வொருவருடைய வாழ்விலும் இடம்பெற வேண்டிய தலையாய அம்சமாகும்.

### தெளிந்தோர் பேணுமின்!

ரிஷிக்கடன் என்று ஒன்று உண்டு. 'வேதமாகிய செல்வத்தைப் பயிலுவதனாலும் காப்பதனாலும் ரிஷிகளுக்குச் செலுத்த வேண்டிய கடன் தீருகிறது' என்பது சான்றோர் வாக்கு. மகான்களைப் போற்றுவது என்பது அவர்கள் சொன்னபடி வாழ்வதும், அவர்தம் கருத்தைப் பிறரும் அறியச் செய்ய முயல்வதும் ஆகும். "ஸ்வாத்யாய ப்ரவசநாப்யாம் ந ப்ரமதிதவ்யம் — சாஸ்திரங்களை ஓதுவதையும் பிறருக்கு ஓதுவிப்பதையும் எந்த நிலையிலும் கைவிடாதே" என்று வேதம் திட்டவட்டமாக அறிவுரை தருகிறது.

எந்தச் சூழ்நிலையிலும் மனிதன் தன்னைத் தானே காத்துக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறான். நீரை விலக்கிப் பாலை ஏற்கும் அன்னம் போல் அதர்மத்தை விலக்கித் தர்மத்தைக் கொள்வதே நாம் செய்ய வேண்டுவதாகும். "தன்னாலே தன்னை உயர்த்திக்கொள்ள வேண்டும். தன்னைத் தாழ்த்திக்கொள்ளக் கூடாது. நிச்சயமாகத் தானே தனக்கு உறவினன். தானே தனக்குப் பகைவன்" என்பது கீதாசாரியனின் அமர வாக்காகும்.

### தார்மிகமாக ஏன் வாழ வேண்டும்?

தீவறு செய்பவர்களெல்லாம் நன்றாக வாழ்கிறார்கள்; நியாயமாக வாழ்ந்தால் கஷ்டம்தான் ஏற்படுகிறது. ஆகவே நாமும் அப்படி வாழ்ந்தால் என்ன?' என்று சிலர் கேட்கலாம்; கேட்கிறார்கள். அடாது செய்தும் நன்றாக வாழ்பவர்கள், தாங்கள் முன்பு செய்த நல்வினையின் பயனை இப்போது அனுபவித்துக்கொண்டிருக்கிறார்கள். இப்போதைய அவர்களின் தீவினையின் விளைவைப் பின்னொரு காலத்தில் அவர்கள் அறுவடை செய்வார்கள். தர்மம்தான் வாழ்க்கைக்கு உயிர்நாடி. எனவேதான் 'அடாது செய்வோர் படாது படுவர்' என்று ஆன்றோர் குறிப்பிட்டனர்.

அது போலவே தார்மிகமாக இப்போது வாழ்ந்தும் கஷ்டப்படுபவர்கள், தாங்கள் முன்பு செய்த தீவினையின் பயனை இப்போது அனுபவித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் உண்மை. இப்போதைய அவர்களின் நல்வாழ்க்கையின் பயன் பின்னொரு சமயம் அவர்களுக்கு நிச்சயம் வந்துசேரும் என்பது முக்காலும் உண்மை.

யுகதர்மம் என்று சொல்லத் தக்க வகையில் எங்கும் அநீதியைக் காணும்போதும், அதர்மவழி நடப்பது வாழ்க்கைக்குச் சாதகமாக இருப்பதுபோல் தோன்றும்போதும், 'நாமும் அப்படியே நடந்து கொண்டால் என்ன?' என்ற எண்ணம் தோன்றவே செய்கிறது. தர்மத்தைக் கடைப்பிடிப்பது சிரமம் போலத் தோன்றினாலும் நாம் தர்மத்தைத்தான் கடைப்பிடிக்க வேண்டும். தர்மத்தை நாம் காப்பாற்றினால், அதற்குப் பதிலாகத் தர்மம் நம்மைக் காப்பாற்றும். ஸ்ரீராமபிரான் காட்டுக்குச் சென்றபோது குறிப்பிட்டார்—"லட்சுமணா! நான் அதர்மத்திற்குப் பயப்படுகிறவன். தப்புக் காரியங்களைச் செய்ய விரும்பாதவன். அயோத்தியில் முடிசூட்டிக் கொள்வது எனக்கு மிகவும் சுலபமானதுதான். என்றாலும் அதர்ம மார்க்கத்தில் அரசைப் பெற விரும்பவில்லை. அயோத்தி என்ன? தேவலோகத்திலிருந்து இந்திர பதவியை அடைந்து அரசு பெறவும் எனக்குச் சக்தி உண்டு. என் கோதண்டமும் பலமும் எங்கே சென்றன? அநீதி மார்க்கத்திலிருந்து பணம் சம்பாதிக்கக்கூடாது என்பதனால்தான் சும்மா இருக்கிறேன். தர்மத்தைக் கடைப்பிடித்து நாம் ரட்சித்தால் அது நம்மைக் காக்கும்."

அதர்ம வழி வாழ்க்கை, எடுத்த எடுப்பில் அமுதம் போலத் தோன்றினாலும், முடிவில் அது விஷமாகவே முடியும். தர்மவழி வாழ்க்கை ஆரம்பத்தில் அனுஷ்டிப்பதற்கு விஷம் போன்று இருப்பினும் முடிவில் அது அம்ருதமாகவே நற்பயனை விளைவிக்கும் என்பது ஆன்றோர் கண்ட உண்மை. தர்மமாக நடப்பது அப்போதைக்கு நமக்கும் மற்றவர்களுக்கும் கஷ்டம் தருவது போல் தோன்றினாலும், அது நீடித்த காலத்தில் நிலையான நற்பயனை விளைவிக்கும். தூற்றியவர்களே பாராட்டவும் செய்வார்கள்.

"மகனே! நிச்சயமாக நல்லதைச் செய்பவன் ஒரு போதும் தீய நிலையை அடையவேமாட்டான்", "குந்திபுத்திரனே! என் பக்தன் நாசமடைய மாட்டான் என்று உண்மையில் உணர்ந்து உலகுக்கு உரைப்பாய்" என்பது கீதைவாக்கு. எனவே சிரமம் இருப்பினும் நன்மையைத்தான், நமது உள்ளத்திற்குத் தர்மம் என்று தோன்றுவதையே செய்ய வேண்டும். 'பிறர் செய்யாதபோது நாம் மட்டும் ஏன் செய்ய வேண்டும்?' என்று அவ்வப்போது மனதில் தோன்றுவது இயல்புதான். எனினும் கீதை வாக்கியங்களை அடிக்கடி நினைவு கூர்வோமாக.

மதத்தில் தொண்டு, தியாகம், பொதுநலம் ஆகியவை ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும்

இடம் பெற வேண்டும். அந்தப் பண்புகள் தனி மனிதனின் முக்தி என்னும் கருத்துடன் இணைந்து உயிர்த்துடிப்புடன் செயற்படுவது முற்றிலும் அவசியம். இதுவே நடைமுறை வேதாந்தமாகும்.

''இந்தியாவின் உயிர்நாடி, முதுகெலும்பு, அடித்தளம் என்ற வகையில் அமைந்திருப்பது ஆன்மிகமே ஆகும்'' என்பதை, சுவாமி விவேகானந்தர் எத்தனையோ தடவை சுட்டிக் காட்டியுள்ளார். தேசியம், தர்மம் ஆகியவற்றைத் தனது கூறுகளாகக் கொண்டு திகழும் இந்தியாவின் ஆன்மிகப் பாரம்பரியத்தைக் கட்டிக் காப்பதில் பாரதமண்ணில் பிறந்த ஆண் பெண் ஒவ்வொருவருக்கும் கணிசமான பங்கு இருக்கிறது.

ஆன்மிக உணர்வுகள் பலப்படுத்தப்படுமானல் அதற்கிசைந்து எல்லாமே பாராட்டும் வகையில் அமையும். ஆகவே எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் நாம் நமது ஆன்மிக உணர்வுகளை உண்மையாகவே பலப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதுதான் நம் முன் இருக்கும் தலையாய பணி ஆகிறது.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் அருளிய பாடல், சம்ஸ்கிருத சுலோகங்கள் இவை போன்றவற்றிலிருந்து தேர்ந்தெடுத்த சிலவற்றைத் தாய்மார்கள் பூஜையறையில் தாங்கள் சொல்வதோடு, தம் குழந்தைகளையும் தங்களுடன் சேர்த்துச் சொல்லும்படி பழக்க வேண்டும். இந்தப் பழக்கம் வளர்ந்து நிலைபெறுவது 'சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு' என்று சொல்லப்படுகிற பல ஏற்பாடுகளிலேயே மிக உன்னதமான ஏற்பாடாக விளங்கும்.

தந்தை சொத்துச் சேர்த்து வைத்துப் போயிருக்கிருர். மகன் அவற்றைத் தான் அனுபவிக்கிருன். அதோடு, தந்தை சேர்த்த சொத்தை மேலும் விருத்தி செய்து அடுத்த தலைமுறையினருக்கு வழங்குகிருன். அது போன்று, பண்டைய சீரிய பண்பாடுகளை நம்முடைய முன்னேர் நம்மிடம் வழங்கிச் சென்றிருக்கிருர்கள். அவற்றைப் பின்பற்றி நாம் நமது வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்வதோடு, அந்தச் செல்வத்தில் நமது பங்கையும் சேர்த்து விருத்திசெய்து, நமக்குப் பின்வரும் தலைமுறையினருக்கு வழங்க வேண்டும்.

பகைமையும் பூசலும் பொருமையும் தொலைந்து, முந்தை வினை முழுவதும் ஒய்ந்திட, சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் போற்றுவோமாக.

'தெய்வம் தெளிமின்! தெளிந்தோர் பேணுமின்!' என்ற இளங்கோவடிகளின் கருத்தைப் புத்தாண்டுச் சிந்தனையாக ஏற்று, நமது உள்ளத்தில் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதியவைத்துக் கொள்வோமாக. நமது வாழ்க்கையில் தார்மிகமும் ஆன்மிகமும் செழிக்க இறைவனைப் பிரார்த்திப்போமாக.

விவேகம், வைராக்கியம், பக்தி, ஞானம், மன அமைதி, மகிழ்ச்சி, நன்மை, பொறுமை, தியாகம், தேசபக்தி, தர்மம், அறிவு வளர்ச்சி, உடல் வளர்ச்சி, மன வளர்ச்சி, திறமை வளர்ச்சி ஆகியவை சமுதாயத்தில் வளர்ந்தோங்க, மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரைப் போற்றுவோமாக. மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றுவோமாக. அல்லற்பிறவி அறுத்து அந்தமில் இன்பம் தருபவனைப் போற்றுவோமாக. பிறந்த பிறப்பறுக்கும் பெருமானைப் போற்றுவோமாக. பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே, மீட்டிங்கு வந்து வினைப் பிறவி சாராதிருக்கப் பிரார்த்திப்போமாக, பிரார்த்திப் போமாக, பிரார்த்திப்போமாக.

நன்மையும் செல்வமும் நாளும் பெருகவே
தின்மையும் பாவமும் சிதைந்து தேய்கவே
சென்மமும் மரணமும் இன்றித் தீர்கவே
இம்மையே இறைவனின் இன்னருள் தன்னிருல்.

வாழிய நலம். வாழிய உலகெல்லாம். ☆

---

சத்தியத்திலும், நீதியிலும், போற்றத்தக்க நடவடிக்கைகளிலும், தூய்மையிலும் மனிதன் இடைவிடாமல் ஆனந்தம் கொள்ள வேண்டும்.

தகுதி வாய்ந்தவர்களிடம் தன்னைப்பற்றிப் பொய்யான விஷயங்களைக் கூறிப் பெருமையடித்துக்கொள்பவனைக்காட்டிலும் பெரிய பாவி இந்த உலகில் யாரும் இருக்க முடியாது. திருடர்களுக்குள் படுமோசமானவன் அவன்தான்.

எல்லா விஷயங்களும் பேச்சினுலேயே நடைபெறுகின்றன. பேச்சு எல்லாவற்றிற்கும் வேராக இருக்கிறது. பேச்சிலிருந்தே எல்லாம் உண்டாகின்றன. பேச்சில் யோக்கியப் பொறுப்பு இல்லாதவன் எல்லாவற்றிலும் யோக்கியப் பொறுப்பு இல்லாதவனுகவே இருப்பான் என்பது உண்மை.

—மனுஸ்மிருதி

# பதஞ்ஜலி யோக சூத்திரங்கள்

சுவாமி விவேகானந்தர்

அத்தியாயம் 1

## சமாதி பாதம்

மனம் குவிதலும் அதன் ஆன்மிகப் பயன்களும்

1. அத யோகாநுசாஸனம்.

**இனி யோக விளக்கம் சொல்லப் படுகிறது.**

2. யோக : சித்தவிருத்திநிரோத :

**யோகம் என்பது சித்தத்தின் விருத்தி களை ஒடுக்குவதாகும். (சித்தம் பலவித உருவங்களாகப் பரிணமிப்பதைத் தடுப்ப தாகும்).**

இங்கு அதிகமான அளவில் விளக்கம் தர வேண்டியது அவசியமாகிறது. சித்தம் என்றால் என்ன என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். சித்தவிருத்திகள் என்றால் என்ன என்பதையும் நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

எனக்குக் கண்கள் இருக்கின்றன. அந்தக் கண்கள் தாமாகப் பார்ப்பதில்லை. தலைக்குள் இருக் கும் மூளையிலிருந்து கண்களுக்கென்று இருக்கும் நரம்பு நிலையத்தை எடுத்துவிடுவதாக வைத்துக் கொள்வோம். அந்த நிலையில் கண்கள் தாம் இருந்த இடத்தில் அப்படியே இப்போதும்தான் இருந்துகொண்டிருக்கின்றன. கண்ணுக்குள் இருக் கும் கருவிழி (கண்மணியும்) சரியாக இருக்கிறது. புறத்திலுள்ள பொருள்களின் பிம்பங்களும் சரியா கவே கருவிழியில் படிகின்றன. அப்படியெல்லாம் இருந்தும் கண்கள் பார்க்கமாட்டா. ஆகவே, பார்த்தல் என்ற செயலுக்குக் கண்கள் தலையாய முக்கியத்துவம் வாய்ந்த கருவிகளாக இல்லை. அவை துணைக்கருவிகள் என்று சொல்லத்தக்க வகையில் இரண்டாம் பட்ச முக்கியத்துவம் கொண்ட கருவிகளாக அமைந்திருக்கின்றன. மூளையிலுள்ள ஒரு நரம்பு நிலையத்திலே பார்வைக்கு உரிய உண்மையான பொறி அமைந்திருக்கிறது. புறத்திலுள்ள இரண்டு கண்கள் மட்டுமே பார்ப்ப தற்குப் போதுமானவையாக இல்லை.

சில சமயங்களில் ஒரு மனிதன் தனது கண் களைத் திறந்தபடியே தூங்கிக்கொண்டிருக்கிறான். அந்த இடத்தில் பார்ப்பதற்குத் தேவையான வெளிச்சம் இருக்கிறது. எதிரில் இருக்கும் பொருள் களின் உருவம் கண்ணில் படுகிறது. அப்படியிருந் தும் தூங்கிக் கொண்டிருப்பவன் எதிரிலுள்ள பொருள்களைப் பார்ப்பதில்லை. ஏனென்றால், அவன் பார்ப்பதற்கு மூன்றாவதாக ஒன்று தேவைப்படு கிறது. அதாவது பார்வைக்கான பொறியுடன் மனம் இணைந்து நிற்க வேண்டும் என்பதுதான் அது.

கண் நமக்குப் புறக் கருவியாக இருக்கிறது. அத்துடன் அகக் கருவியாகிய மூளையிலுள்ள நரம்பு நிலையமும் மனம் என்ற கர்த்தாவின் செயலும் நமக் குத் தேவைப்படுகின்றன.

தெருவிலே வண்டிகள் ஓடிக்கொண்டிருக்கின் றன. என்றாலும் அவற்றின் சப்தம் உங்கள் காதில் விழுவதில்லை. அதற்கு என்ன காரணம்? உங்கள் மனம் சப்தத்தைக் கேட்பதற்குக் கருவியாக அமைந்திருக்கும் காதுடன் ஒன்றுபட்டு இணையாமல் இருந்ததுதான் அதற்குக் காரணமாகும்.

இதுபோலவே, நாம் ஒவ்வோர் உணர்ச்சியை அடையும்போதும் முதலில் புறக்கருவியாக ஒன்று இருக்கிறது. இரண்டாவதாக, மூளைக்குள் அகக் கருவியாக மற்றொரு கருவி இருக்கிறது. மூன்றாவ தாக, இந்த இரண்டுடன் மனம் தன்னை இணைத்துக் கொள்ள வேண்டும் என்பது இருக்கிறது. அதற்குப் பிறகும் மேலும் இரண்டு செயல்கள் புலப்படுத்துபவ னிடம் நிகழ்கின்றன. மனிதனிடம் புத்தி என்ற மற்றோர் அந்தக்கரணம் இருக்கிறது. புறத்திலிருந்து தன்மீது பதியும் பொருள்களின் வடிவம் என்ற அடையாளமாகிய பதிவை மனம் இன்னும் உள்ளே எடுத்துச் சென்று அங்கிருக்கும் புத்தியிடம் சமர்ப் பிக்கிறது. தன் முன்னால் கொண்டு வரப்பட்ட வடிவத்தைப் பற்றிப் புத்தி பொருள்படுத்தித் தீர் மானம் செய்கிறது. இவ்விதம் புத்தி இயங்கிக் கொண்டிருக்கும் அதே சமயத்தில் புத்திக்கும் மேல் இருக்கும் அகங்காரம் என்ற அந்தக்கரணமும் கூடவே எழுந்து வெளிப்படுகிறது. இவ்விதம் புறக்கரணம், அந்தக்கரணங்கள் ஆகியவற்றில் நிகழ்கிற செயலும் எதிர்ச் செயலும் ஒன்றாகச் சேர்ந்து, உள்ளிருக்கும் உண்மையான ஆத்மாவா கிய புருஷனிடம் சேர்ப்பிக்கப்படுகின்றன. அந்தப்

புருஷன் தன் முன்னிலையில் ஒன்ருகச் சேர்ந்து வந்த கலவையில் ஒரு பொருளைப் பார்க்கிருன்.

இந்திரியங்கள், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய வற்றின் தொகுதி அந்தக்கரணம் (உட்கருவி) என்று அழைக்கப்படுகிறது. இந்த அந்தக்கரணங்கள் சித்தம் எனப்படும் உள்ளத்தின் (மனதின்) பலவிதச் செயல்களே ஆகும். சித்தத்தில் எண் ணம் என்ற அலைகள் எழுகின்றன. இந்த எண்ண அலைகளுக்கு விருத்திகள் (சுழல்கள்) என்று பெயர்.

எண்ணம் என்பது என்ன? எண்ணம் என்பது சித்தத்திலுள்ள ஒரு சக்தியாகும். வெளியுலகில் புறப் பொருள்களிடம் ஆகர்ஷணம் என்ற கவர்ந்தி ழுக்கும் ஈர்ப்புச் சக்தி இருப்பதைப் போலவும், அந்த ஈர்க்கும் சக்திக்கு எதிரிடையாக விலக்கி வெளியே தள்ளும் (விகர்ஷணம்) சக்தி இருப்ப தைப் போலவும், எண்ணம் என்பது சித்தத்தில் இருக்கும் ஒரு வகையான சக்தியாகும். இயற்கை யில் எல்லையற்ற ஆற்றல் அடங்கியிருக்கிறது. இயற்கையிலுள்ள அகண்டமான இந்தச் சக்திக் களஞ்சியத்திலிருந்து, மனிதனின் சித்தம் என்ற கருவியானது சிறிதளவைக் கிரகித்து எடுத்துக் கொள்கிறது. அவ்விதம் கிரகித்த அந்தச் சக்தி யைச் சித்தம் தன்னிடம் ஏற்றுத் தனக்கு உரியதாக ஆக்கிக் கொள்கிறது. பிறகு அந்தச் சக்தியை அது எண்ணங்களாக வெளியே செலுத்துகிறது. இந்தச் சக்தி நமக்கு உணவின் மூலம் வருகிறது. உணவிலிருந்து உடலானது, இயங்குதல் முதலிய செயல்களுக்குத் தேவையான வலிமையைப் பெறு கிறது. இது போலவே அதே உணவிலிருந்து சூட்சுமமான வேறு சக்திகளும் உண்டுபண்ணப் படுகின்றன. இந்தச் சூட்சும சக்திகளை, அது, நாம் எண்ணங்கள் என்று சொல்லும் வடிவத்தில் வெளியே தள்ளுகிறது.

ஆகவே மனம் என்பது அறிவுள்ளதல்ல என்பதை நாம் பார்க்கிருேம். ஆனல், அது அறி வுள்ளது போலத் தோன்றுகிறது. அவ்விதம் அது தோன்றுவதற்கு என்ன காரணம்? காரணம் என்ன வென்ருல், அறிவுள்ள ஆத்மா அதன் பின்னுல் இருக்கிறது. உண்மையில் ஆத்மா ஒன்றே ஒன்று மட்டும்தான் சேதனப் பொருளாக, அதாவது அறிவுப் பொருளாக இருக்கிறது. மனம் என்பது வெளியுலகத்தை ஆத்மா பற்றுவதற்குப் பயன்படும் ஒரு கருவியாக மட்டுமே இருக்கிறது.

உதாரணமாக, இந்தப் புத்தகத்தை எடுத்துக் கொள்வோம். புறத்தில் புத்தகம் என்ற வடிவத்தில் இருக்கும் இந்தப் பொருளை உண்மையில் நாம் அறிந்து கொள்ளவில்லை. அறிந்து கொள்ளவும் முடியாது. குளத்தில் ஒரு கல்லை வீசினல், அதற்கு எதிர்ச் செயலாகத் தண்ணீர் அலைகள் என்ற வடிவத்தில் கல்லை எதிர்த்து மோதுகிறது. அது போல, நம்மால் அறிந்துகொள்ள முடியாத இந்தப் பொருள் நமது மனதைச் சென்று தாக்கி ஒரு தூண் டுதலை அதாவது விருத்தியை உண்டுபண்ணுகிறது. அந்தத் தூண்டுதலுக்குப் பதில் தரும் வகையில் மனம் புத்தகம் என்ற வடிவத்தைப் பொருள்படுத்து கிறது. இவ்விதம் தண்ணீரில் அலைகள் உண்டா வதைப் போல, சித்தத்தில் விருத்திகள் தோன்று கின்றன. வெளியே இருக்கும் பிரபஞ்சம், மனதில் விருத்திகள் என்ற எதிர்ச் செயல்கள் தோன்றுவ தற்குக் காரணமாக இருக்கிறது. புத்தகத்தின் உருவமோ, யானையின் உருவமோ, மனிதனின் உருவமோ வெளியுலகத்தில் இல்லை; அதாவது, அவற்றைப் பற்றி வெளியிலிருந்து வரும் தூண்டு தல்களுக்குப் பதிலாக நமது மனதில் ஏற்பட்ட விருத்திகளைப்பற்றி மட்டும்தான் நாம் அறிந்திருக் கிருேம்.

'ஐம்புலன்களைக் கொண்டு அறிந்துகொள்வதற்கு என்றும் இன்றியமையாததாக இருப்பது ஜடப் பொருள் (பௌதிகப் பொருள்) ஆகும்' என்று ஜான் ஸ்டுவர்ட் மில் என்ற மேலைநாட்டு அறிஞர் குறிப் பிட்டிருக்கிருர். புறத்தில் இருப்பது மனதில் விருத் தியை உண்டுபண்ணுதற்குக் காரணமாக மட்டுமே அமைந்திருக்கிறது. இந்த உண்மையை விளக்கு வதற்கு ஒரு முத்துச் சிப்பியை உதாரணமாக எடுத்துக்கொள்வோம்.

முத்து எப்படி உண்டாகிறது என்பது உங்களுக் குத் தெரிந்திருக்கும். புறத்தில் இருக்கும் ஒட்டுண் ணியாகிய ஒரு கிருமி முத்துச் சிப்பியின் ஓட்டுக்குள் புகுந்து அதை உறுத்துகிறது. அதாவது சிப்பிக்குள் இருக்கும் பூச்சியை அது ஒருவிதத் தினவுக்கு உட் படுத்துகிறது. இந்தத் தொந்தரவிலிருந்து விடுபடு வதற்காகச் சிப்பி மினுமினுப்பான ஒருவிதத் திராவகத்தை அதாவது எனமல் பசையைக் கக்கி வெளிப்படுத்துகிறது. பிறகு, சிப்பி தனக்கு உபத் திரவம் விளைவித்த கிருமியைச் சுற்றிலும் அந்த எனமல் பசையைப் பூசிக் கிருமியை மூடி மறைத்து விடுகிறது. இதனல் முத்து உண்டாகிறது. நமது அனுபவத்தில் இருக்கும் பிரபஞ்சமும் நம்மால் ஆக் கப்பட்ட எனமல் பசையைப் போன்றது என்று சொல்லலாம். முத்து உண்டாவதற்கு ஒட்டுண்ணி கிருமி உட்கருவாக அமைகிறது. அந்தக் கிருமி

யைப் போல உண்மையான பிரபஞ்சம் (வெளியுலகம்) நமது அனுபவத்திற்கு அடிப்படைக் காரணமாக அமைந்திருக்கிறது. சிப்பிக்குள் கிருமி புகுவதைப் போல உண்மையான பிரபஞ்சம் ஐம்புலன்களின் மூலம் நமக்குப் புலப்படுகிறது. சிப்பி எனுமல் பசையை வெளிப்படுத்துவதைப் போல, இந்தப் பிரபஞ்சத்தை அறிந்துகொள்ளுதல் என்ற செயலை நாம் செய்கிறோம். இவ்விதம் மனதில் நடைபெறும் செயலைச் சாதாரண மனிதன் ஒருபோதும் அறிந்துகொள்ள மாட்டான். ஏனென்றால், அவ்விதம் அவன் தெரிந்துகொள்ள முயற்சி செய்யும் அதே சமயத்தில் தன் எனுமல் பசையையே வெளியே அனுப்புகிறான். பிறகு தன்னுடைய அந்த எனுமல் பூச்சையே பார்க்கிறான். ஆகவே தனது மனம் உண்டுபண்ணிய அனுபவத்தைத் தவிர வேறு எதையும் மனிதனால் புரிந்துகொள்ள இயலுவதில்லை.

இப்போது இந்த விருத்திகள் என்றால் என்ன என்பதை நாம் அறிந்துகொள்கிறோம். உண்மையான மனிதன் அதாவது ஜீவாத்மா மனதிற்கும் பின்னால் இருக்கிறான்; அவன் கையில் உள்ள ஒரு கருவியாக மனம் இருக்கிறது; அந்த ஜீவாத்மாவினுடைய புத்திதான் மனதில் ஊடுருவியிருப்பதன் மூலம் செயல் புரிந்து வருகிறது. மனதிற்குப் பின்னால் உண்மையான மனிதனாகிய நீ (ஆத்மா) நிற்கும்போதுதான் மனம் புத்தியு(அறிவு)டையதாகிறது; அப்போதுதான் மனதுக்கு அறிந்துகொள்ளும் திறமை உண்டாகிறது. ஆத்மா மனதைக் கைவிட்டுவிடும்போது அது தூள்தூளாகச் சிதறிப்போய் ஒன்றுமே இல்லாமல் வெறுமை ஆகிவிடுகிறது. இவ்விதம் இப்போது சித்தம் என்பது என்ன என்பதை நீங்கள் அறிந்துகொள்ளுகிறீர்கள். சித்தம் மனதிற்கு இருப்பிடமாகும். புறக்காரணங்கள் அதாவது வெளியுலகில் இருப்பவை சித்தத்தின் மீது தாக்கும்போது அதில் எழுகிற அலைகளும் சுழிகளுமே விருத்தி என்று பெயர் பெறுகின்றன. இந்த விருத்தியே நம்மால் அறியப்படும் நமது பிரபஞ்சமாக விளங்குகிறது.

ஓர் ஏரியின் அடிமட்டத்தை நம்மால் பார்க்க முடிவதில்லை. ஏனென்றால், அலைகள் அதன் மேற்பரப்பை மூடியிருக்கின்றன. சிற்றலைகள் அடங்கித் தண்ணீர் அமைதியாக இருக்கும்போது மட்டும் ஏரியின் அடிப்பகுதியைக் காண்பது நமக்கு ஒரு சிறிது சாத்தியமாகிறது. மேலும், சேறு காரணமாகத் தண்ணீர் கலங்கியிருந்தாலோ அல்லது சதாகாலமும் ஏரி கொந்தளித்தபடியே இருந்தாலோ அதன் அடிமட்டத்தை நம்மால் பார்க்க முடியாது. தண்ணீர் தெளிந்தும் அலைகள் இல்லாமலும் இருக்குமானால் அதன் அடிவாரத்தை நம்மால் பார்க்க இயலும்.

ஏரியின் அடிமட்டத்தை நமது உண்மையான ஆத்மாவுக்கு உவமையாகச் சொல்லலாம். சித்தமே ஏரியாகும். அதிலுள்ள விருத்திகளே அலைகளாகும்.

மேலும், மனம் மூன்று வித நிலைகளுக்கு உட்பட்டிருக்கிறது. அவற்றுள் ஒன்று, இருள்மயமானது. இது தமோகுணம் என்று சொல்லப்படும்; இந்தக் குணம் விலங்குகளிடமும் அறிவில்லாத மக்களிடமும் காணப்படுகிறது; இது மற்ற உயிர்களுக்குத் துன்பம் தரும் வகையிலேயே செயற்படுகிறது. மனதின் அந்த நிலையில் வேறு எந்த விதமான உயர்ந்த எண்ணமும் உதிப்பதில்லை.

அடுத்ததாக, மனம் செயலில் சுறுசுறுப்பாக ஈடுபடும் நிலை இருக்கிறது. அது ரஜோகுணம் எனப்படும். இந்த ரஜோகுணம் கொண்ட மனம், அதிகாரம் செலுத்துவதையும் உலக இன்பங்களை அனுபவிப்பதையும் தன் முக்கிய நோக்கங்களாகக் கொண்டிருக்கிறது. "நான் அதிக அளவில் ஆற்றல்களைப் பெற்றிருப்பேன்; மற்றவர்களையெல்லாம் என் அதிகாரத்துக்கு உட்படுத்தி அவர்களை அடக்கி ஆளுவேன்!" என்ற ரீதியில் ரஜோகுணம் கொண்ட மனம் நினைக்கவும் செயற்படவும் செய்கிறது.

மூன்றாவதாக, சத்துவகுணம் என்று சொல்லப்படும் மனதின் நிலை இருக்கிறது. அது தெளிந்த அமைதியும் சாந்தமும் கொண்ட மனதின் நிலையாகும். அத்தகைய மனதில் விருத்திகள், மனவிகாரங்கள் என்று சொல்லப்படுகிற அலைகளெல்லாம் ஓய்ந்து தணிந்துவிடுகின்றன. மனம் என்னும் ஏரியிலுள்ள நீர் முற்றிலும் தெளிவான நிலையை அடைந்துவிடுகிறது. இந்த நிலை, மனம் எந்த ஒரு செயலிலும் ஈடுபடாமல் செயலற்றிருக்கும் நிலை அல்ல. அதற்கு மாறாக, அதிக பலம் பொருந்திய சுறுசுறுப்புடன் மனம் ஏராளமான செயல்களில் ஈடுபடும் நிலை என்று அதைச் சொல்லலாம். ஆழ்ந்த அமைதியில் நிலைபெற்றிருப்பது பேராற்றல் படைத்த உன்னத மனதின் வெளித்தோற்றமாகும், அறிகுறியாகும். பதைபதைப்புடன் செயல்களில் ஈடுபடுவது மிகவும் எளிது. குதிரையின் கடிவாளங்களை

இழுத்துப் பிடிக்காமல் அப்படியே விட்டுவிடுவது மிகவும் சுலபம். கடிவாளத்தை விட்டு விட்டால் குதிரைகள் தாம் விரும்பிய திசைக்கு உன்னையும் இழுத்துக்கொண்டு ஓடியே போய்விடும். குதிரைகள் உன்னை இழுத்துச் செல்லும்படி விட்டுவிடுவது சுலபம். அப்படிக் கடிவாளத்தை விட்டுவிடும் காரியத்தை யார் வேண்டுமானாலும் செய்துவிட முடியும். ஆனால், தம் போக்கில் விரைந்தோடும் குதிரைகளைக் கடிவாளத்தை உறுதியாகப் பற்றிப் பிடித்துக்கொள்வதால் தடுத்து நிறுத்தக் கூடியவன் எவனோ அவனே வல்லமை வாய்ந்த மனிதனாவான். கடிவாளத்தை விட்டுவிடுவதற்கு மிகுந்த வலிமை வேண்டுமா? அல்லது, கடிவாளத்தை இழுத்துப் பிடித்துக் குதிரைகளை அடக்குவதற்கு மிகுந்த வலிமை வேண்டுமா?

மனதை விரும்பியபடியெல்லாம் அலையவிடாமல் தடுத்து வைப்பவனே வல்லமை வாய்ந்தவனாவான். அமைதியாக இருப்பதால் சத்துவகுணம் கொண்ட மனிதனை மந்தபுத்தி கொண்டவன் என்று நினைத்து விடக் கூடாது. சத்துவகுணத்தை மந்தநிலை என்றாவது, சோம்பல்நிலை என்றாவது நீங்கள் தவறாக நினைத்துவிடக் கூடாது. மனதில் எழும் விருத்திகளாகிய அலைகளைக் கட்டுப்படுத்தித் தன் வசத்தில் வைத்திருக்கும் ஒருவனே சாந்தபுருஷன் ஆகிறான். ஆகவே பதைபதைப்புடன் செயல்களில் ஈடுபடுவது என்பது தாழ்ந்த வகையைச் சேர்ந்த வலிமை(ஆற்றலின்)யின் புறத் தோற்றமாகும். ஆழ்ந்த அமைதி நிலையோ உயர்ந்த வகையைச் சேர்ந்த வலிமையின் புறத் தோற்றமாகும்.

பரிசுத்தமான ஆத்மாவிலிருந்து சித்தம் தோன்றியிருக்கிறது. சித்தம் தன்னுடைய இயல்பாகிய பரிசுத்த நிலைக்கு (ஆத்மசொருபத்திற்கு)த் திரும்பிச் செல்ல எப்போதும் முயன்றபடியே இருக்கிறது: ஆனால், இந்திரியங்கள் அந்தச் சித்தத்தை வெளியே இழுத்துக்கொண்டு வருகின்றன. அதை அடக்கி, இந்த வெளியே செல்லும் இயல்பைத் தடுக்க வேண்டும்; அவ்விதம் அடக்கப்பட்ட சித்தத்தை அறிவு சொருபமாக விளங்கும் ஆத்மாவை நோக்கித் திரும்பிச் செல்லுவதற்கு உரிய வழியில் செலுத்த வேண்டும்; இவ்விதம் சித்தத்தை அடக்குவதும் ஆத்மாவை நோக்கிச் செல்லும் அதன் பிரயாணத்தை ஆரம்பித்து வைப்பதுமே யோகத்தின் முதற்படியாகும். இந்த முறையினால் மட்டுமே சித்தம் தன்னுடைய சரியான வழியைச் சென்றடையும்.

மிகவும் கீழ்நிலையிலுள்ள பிராணி முதற்கொண்டு மிகவும் உன்னத நிலையிலுள்ள பிராணி வரையிலுமுள்ள எல்லா உயிர்களிடமும் சித்தம் இருக்கிறது. ஆனால் மனிதனிடம் மட்டும்தான் அது பகுத்தறியும் ஆற்றலைக் கொண்ட விவேக புத்தியாகக் காணப்படுகிறது. அவ்விதம் மனம் விவேக புத்தியாக மாறாத வரையில், யோகம் குறிப்பிடும் படிகளின் மூலம் உள்முகமாகத் திரும்பிச் சென்று ஆத்மாவை விடுதலை பெறும்படிச் செய்ய அதற்கு இயலுவதில்லை. பசுவுக்கும் நாய்க்கும் உடனடியாக இப்போதே முக்தி (ஸத்யோ முக்தி) கிடைப்பது என்பது சாத்தியமில்லை. ஏனென்றால், அந்த உயிர்களிடமும் மனம் என்பது இருந்தாலும், அவற்றின் சித்தம் விவேகபுத்தி என்ற வடிவத்தை இன்னும் பெறாமலே இருக்கிறது.

சித்தம் பின்வரும் ஐந்து வடிவங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது:—1. சிதறிப் போய் இருக்கும் நிலை, 2. இருளடைந்து நிற்கும் நிலை, 3. ஒன்றாகச் சேகரித்தெடுக்கும் நிலை, 4. ஒருமுகப் படுத்த முயற்சி செய்யும் நிலை (ஏகாக்ர நிலை), 5. ஒருமுகப்பட்டுக் குவிந்திருக்கும் நிலை என்பவையே இந்த ஐந்து நிலைகளாகும்.

சித்தம் சிதறிப் போயிருக்கும் நிலைதான் அது செயலில் ஈடுபடும் நிலையாகும். இந்த நிலையில் அது இன்ப அனுபவமாகவும் துன்ப அனுபவமாகவும் தன்னை வெளிப்படுத்திக்கொள்ளும் இயல்பைக் கொண்டிருக்கிறது. இருளடைந்து நிற்கும் நிலையில் அது மந்தமான நிலையில் இருக்கிறது; அப்போது அது தீய செயல்களில் நாட்டம் கொண்டு, பிறருக்கு ஹிம்சை விளைவிக்கிறது. 'இன்பத்தை நாடுவதும் துன்பத்தைத் தவிர்ப்பதும் தேவர்கள் வானவர்கள் ஆகியோரின் இயல்பாக அமைந்திருக்கின்றன; தீய செயல்களில் நாட்டம் கொண்டு பிறருக்கு ஹிம்சை விளைவிப்பது அசுரர்களின் இயல்பாகும்' என்று உரையாசிரியர் கூறுகிறார். ஒன்றாகச் சேகரித்தெடுக்கும் நிலை என்பது, சித்தம் தன்னை ஒருமுகப்படுத்திக் கொள்ளப் போராடும்போது ஏற்படுகிறது. ஏகாக்ர நிலை என்பது, ஆத்ம சாதனங்களில் சித்தம் ஒருமுனைப்பட்டு நிற்க முயற்சி செய்யும் நிலையாகும். இவ்விதம் சித்தம் ஒருமுகப்பட்டுத் தியானத்தில் குவிந்திருக்கும் நிலையே நம்மைச் சமாதிக்குக் கொண்டு போகிறது.

[தொடரும்]

# ராமகிருஷ்ணர் வர வேண்டும்

சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியார்

ஸ்ரீ ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதிய கட்டுரை இது.

தற்போது நமக்குத் தேவைப்படுபவர் யார்? இயக்கங்களை நடத்தி வைக்கும் தலைவர்களா? மக்களுக்கு வழிகாட்டும் ஆசாரியர்களா?

இயக்கங்களை நடத்தும் தலைவர்களைக்காட்டிலும் ஆசாரியர்களே அவசியம் என்பது என் கருத்து.

பள்ளிக்கூடத்தில் பாடம் சொல்லித் தரும் ஆசிரியர்கள் போலன்றி, தர்மத்தை வாழ்ந்து காட்டும் ஆசாரியர்களே நமக்குத் தேவை.

மக்கள் ஒவ்வொருவரும் நன்னடத்தையுடன் இருக்க வேண்டும்; ஆண் பெண் அடங்கலும் இன்று இருப்பதைவிடச் சுயநல எண்ணம் குறைந்து வாழ வேண்டும்; ஒவ்வொருவரும் பிறர் நலனையும் கஷ்டங்களையும் அதிகம் கவனித்து அனுதாபம் கொள்ள வேண்டும்; எல்லோரும் நேர்மையாக வாழ வேண்டும். பணத்தைவிடச் சத்தியத்தையும் நல்ல குணத்தையும் பெரிதாக மதிக்க வேண்டும். இவ்வளவு மாறுதல்கள் நிகழ வேண்டும் என்றால் தலைவர்களைவிட ஆசாரியர்கள் தேவை.

இவ்வாறு மக்களை நல்வழிப்படுத்துவது ஓர் இயக்கத்தினால் முடியாது.

திட்டம் வகுத்துக்கொண்டு ஓர் ஆண்டிலோ, அல்லது இரண்டு ஆண்டிலோ அல்லது நமது ஆயுட்காலத்துக்குள்ளேயே திட்டநோக்கத்தை அடைய வேண்டும் என்று ஆசைப்பட்டால் அதற்கு ஓர் இயக்கமும் தலைவனும் அவசியமே. ஆனால் மக்கள் அனைவரையும் சீர்திருத்தும் பணி காலக்கெடுவுக்குள் முடிக்கக் கூடிய காரியமாகாது. எல்லோருடைய உள்ளத்திலும் தருமங்கள் நன்றாக ஊறி, அவர்கள் நன்னடத்தையைக் கைக்கொள்ள வேண்டுமானால்,இந்தப் பெரிய மாற்றம் நிகழ்வதற்கு அவசரம் காட்டக்கூடாது. சோர்வு அடையாமல், சத்தியங்களைச் சிறுகச் சிறுக, மெல்ல மெல்லப் புகட்டிக்கொண்டேயிருந்தால்தான் மக்களின் மனோபாவமும் நடத்தையும் மாறும். இதற்குக் கால வரம்பு நிர்ணயிக்க முடியாது. இது மிகவும் நிதானமாகவே நடைபெற வேண்டிய பணி. தலைவனாலும் இயக்கத்தாலும் செய்யக்கூடிய பணி அல்ல இது. இயக்கத் தலைவனிலிருந்து மாறுபட்ட முறையில் பணி செய்யும் ஆசாரியனே இந்தப் பணியைச் செய்ய முடியும்.

ஆசாரிய புருஷர்களின் பணியில் பகட்டுக்கும் டாம்பீகத்துக்கும் இடமில்லை. தன் ஆயுட்காலத்திலேயே காரியத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற அகங்கார வேகங்கள் ஆசாரியனுக்கு இல்லை. இயக்கத்துக்குத் தலைமை தாங்குபவன் தன் பெயர் பிரபலமடைவதற்குப் பாடுபட வேண்டியது அவசியம். மக்கள் கவனத்தைக் கவருவதற்காக முரட்டுத்தனமாகவோ சாதுரியமாகவோ முயலவும் வேண்டும். இல்லாவிட்டால் இயக்கம் வளராது.

ஆசாரியனுடைய பணி இந்த முறையில் சேராது. அவனுக்கு இந்த வழி தேவையுமில்லை. தான் உலகின் கவனத்துக்கு ஆளாகாமலிருக்க வேண்டும் என்றே அவன் விரும்புவான். மௌனமாக அவன் பணிபுரிய வேண்டும். சீடர்களின் ஆன்மாக்களைத் தனது உள்ளார்ந்த காந்தசக்தியால் கவர வேண்டிய அவனுக்கு வெளிப்புறக் கவர்ச்சியால் ஆவதொன்றுமில்லை. உலகம் தன்னை அறிந்துகொள்வதில் அவன் மறைமுகமாகவோ வெளிப்படையாகவோ மகிழ்ச்சியடைந்து சுய விளம்பரத்தை ஒரு கலையாகப் பயின்றானேயானால்—அப்போதே அவனுடைய் ஆசாரியத் தகுதி அழிந்து போகும். புகழ்பெறும் முயற்சியில் அவன் பெரும்பாலும் தோல்வியே அடைவான். வெற்றி அடைந்தாலும் சரி, தோல்வி அடைந்தாலும் சரி, இந்த வெற்றியும் தோல்வியும் ஆசாரியனுக்கு உரியவை அல்ல.

ஆசாரியன் பெருமைகளைத் தேடிப் பாடுபடுவதில்லை. தருமத்தை நோக்கி, தருமத்துக்காகவே அவன் பாடுபடுகிறான். தர்மத்தை உண்மையாகப் பின்பற்றுபவன், யாரும் அறியாதவனாகத்தான் இருக்க முடியும். ''ஒவ்வொரு தலைமுறையிலும் யாரும் அறியாத முப்பத்தாறு உத்தமர்களால்தான் உலகத்தின் விதி நிர்ணயிக்கப்படுகிறது'' என்று யூதர்களின் சாஸ்திரநூலாகிய தால்முத் (Talmud) கூறுகிறது.

இப்படிப்பட்ட ஆசாரியர்களை நாம் கண்டதுண்டா? கண்டிருக்கிறோம். ஆண்டவன் தன் கருணையினால் அவ்வப்போது அனுப்பி வைத்திருக்

கிருன். ஸோக்ரதர் இவ்வாறுதான் அனுப்பப் பட்டார். இயேசுநாதரும் கௌதமபுத்தரும் இவ்வாறு வந்தவர்களே. பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடர்கள் தொகுத்துள்ள உபதேசக் குறிப்புக்களிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணரும் ஆண்டவன் அனுப்பி வைத்த உத்தம ஆசாரிய புருஷனே என இப்போது நாமெல்லாம் உணர்ந்திருக்கிறோம்.

மகாகவி மில்டனை எண்ணி வெர்ட்ஸ்வொர்த் பாடியது போல், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் நம்மிடையில் மீண்டும் வரவேண்டும், வரவேண்டும் என அடியில் வருமாறு வேண்டுவோமாக: —

"ராமகிருஷ்ணா! நீ இந்த நிமிஷத்தில் இங்கு எங்களுடன் வாழ்ந்திருக்க வேண்டும். தற்போதைய இந்தியாவுக்கு நீ மிகவும் தேவைப்படுகிறாய். ஆத்ம சாந்தி என்ற பரம்பரைச் செல்வத்தை இழந்து நிற்கிறோம். சுயநலக்காரர்களாகி விட்டோம் அப்பனே, நீ மீண்டும் இங்கு வந்து எங்களை உயர்த்து; எங்களுக்கு நன்னடத்தையைக் கொடு; சீலத்தைக் கொடு; சுதந்திரத்தைக் கொடு; சக்தியைக் கொடு" இவ்வாறு நாம் கதறிப் பிரார்த்தித்தால் நம் வேண்டுகோளை ஆண்டவன் கேட்டருள்வான்.

நன்றி 'கல்கி' 1964 தீபாவளி மலர்

****************************************

## ஸ்ரீ அன்னையாரின் ஜயந்தி விழா நிகழ்ச்சிகள்

* 1979 டிசம்பர் 10-ஆம் நாள் திங்கட் கிழமையன்று தூய அன்னை ஸ்ரீ சாரதாதேவியாரின் 127-ஆவது ஜன்ம திதிபூஜை வழக்கம்போல் மயிலை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. விடியற்காலை முதற்கொண்டு நடுப்பகல் வரையிலும் தியானம், பஜனை, பூஜை, பாராயணம், ஹோமம், பிரசாத விநியோகம் முதலியன விமரிசையாக நடந்தேறின. மாலை ஆரத்திக்குப் பிறகு மடத்தில் கூடியிருந்த பக்தர்களுக்கு ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தர் தமிழிலும், ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தர் ஆங்கிலத்திலும் ஸ்ரீஸ்ரீ அன்னையாரைக் குறித்து உரையாற்றினர்.

16-12-79 ஞாயிறன்று ஜயந்தி விழாப் பொதுக் கூட்டம் விவேகானந்தர் ஹாலில் நடைபெற்றது. அன்று மாலை 5 மணி முதல் 5-30 வரை நடைபெற்ற பக்திப் பாடல்கள் நிகழ்ச்சியைத் தொடர்ந்து ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தரின் தலைமையில் திருமதி பார்வதி ஸ்ரீநிவாசன் அவர்கள், தூய அன்னையாரைக் குறித்துத் தமிழில் பேசினர். அடுத்து ஆங்கிலத்தில் பேசிய ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தர், அன்னை ஸ்ரீ சாரதாதேவியாரின் வாழ்வு-வாக்கு ஆகியவை பற்றி பல நிகழ்ச்சிகளின் மூலமும் உபதேசங்களின் மூலமும் விளக்கிப் பேசினர். இரவு ஏழு மணிக்கு விழா நிகழ்ச்சிகள் நிறைவுபெற்றன.

* வடஆர்க்காடு மாவட்டத்திலுள்ள குயிலம், செங்கம் ஆகிய இரண்டு இடங்களிலும் ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த மன்றங்கள் சிறப்பாக இயங்கி வருகின்றன. இந்த இரண்டு இடங்களிலுமுள்ள ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றங்களின் சார்பாக 15-12-79 சனிக்கிழமை மாலை 5 மணிக்குச் செங்கம், பெருமாள் கோவிலில் அன்னை ஸ்ரீ சாரதா தேவியின் ஜயந்தி விழாக் கூட்டம் நடைபெற்றது. திரு சி. துரைராசன் பி. ஏ. பி. எல். அவர்களின் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தர் 'இந்தியப் பெண்மணிகளின் இலட்சியம் அன்னை ஸ்ரீ சாரதாதேவி' என்ற தலைப்பில் உரையாற்றினர்.

* திருவண்ணாமலை ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த மன்றம் 16-12-79 ஆம் நாள் அன்னை ஸ்ரீ சாரதாதேவியின் ஜயந்தி விழாவை விமரிசையாகக் கொண்டாடியது. அன்று காலை 10 மணிக்குத் திருவண்ணாமலையிலுள்ள விக்டோரியா இந்துமதப் பாடசாலையில் எஸ். ஆர். வீரராகவன் எம். ஏ. பி. எல் அவர்களின் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தஜி மகராஜ் அவாகள் 'ஸ்ரீராமகிருஷ்ண மடம்-சங்கங்களும் அன்னை ஸ்ரீ சாரதாதேவியும்' என்ற தலைப்பில் உரையாற்றினர்.

* ஆர்க்காடு ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றம் 16-12-79 ஞாயிறு மாலை 5 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயாவில் அன்னை ஸ்ரீ சாரதாதேவியின் ஜயந்தியைக் கொண்டாடியது. டாக்டர் ஜி. பலராமன் அவர்களின் முன்னிலையில் நடைபெற்ற விழாவில் ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தர் 'இந்தியப் பெண்தெய்வங்களும் அன்னை ஸ்ரீ சாரதாதேவியும்' என்ற தலைப்பில் தலைமையுரை நிகழ்த்தினர்.

****************************************

# திருமுடியின் கோலம்

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

அகப் பொருளில் களவு, கற்பு என்ற இரு வகை நிலை உண்டு. திருமணம் செய்வதற்கு முன் காதலனும் காதலியும் உள்ளம் ஒன்றுபட்டு வாழும் வாழ்க்கையைக் களவென்றும், திருமணம் செய்து கொண்டு கணவன் மனைவியராக வாழும் நிலையைக் கற்பென்றும் சொல்வர். கற்பு வாழ்க்கையில் ஊடலும் கூடலும் நிகழும்.

உலகத்திலுள்ள மக்கள் இன்னவாறு வாழ வேண்டுமென்று இறைவன் தன் செயலால் காட்டுகிறான். மனைவி மக்களோடு அறம் செய்து வாழும் வாழ்வு சிறந்தது என்பதை அவனும் உமாதேவியாரோடும் கணபதியோடும் முருகனோடும் வாழ்ந்து காட்டுகிறான். கணவன் மனைவியிடையே ஊடல் நிகழ்வது இயல்பு. அந்த ஊடல் இறைவனுடைய திருவிளையாடலிலும் உண்டு. அம்பிகை ஊடுவதும் அதைப் போக்க இறைவன் முயலுவதுமாக உற்சவம் நடப்பதுண்டு. திருவண்ணாமலையில் திருவூடல் தெரு என்றே ஒரு தெரு இருக்கிறது.

உமாதேவி ஊடுவதாகவும் அந்த ஊடலை நீக்க இறைவன் பல வகையில் முயல்வதாகவும் கற்பனை செய்து புலவர்கள் பாடியிருக்கிறார்கள். அவ்வாறு இறைவன் முயலும்போது இறைவியை வணங்குவதாகச் சொல்வதும் மரபு. அருள்மயமான பிராட்டி உளம் குளிர்ந்தால்தான் உலகுக்கு இன்பம் விளையும். ஆதலின் அந்தப் பிராட்டியின் ஊடலைத் தணிக்க இறைவன் பணிவது தவறு ஆகாது.

இப்படி, அம்பிகையின் ஊடலை நீக்க இறைவன் பணியும் செயலை நினைத்துக் காரைக்காலம்மையார் ஒரு பாடல் பாடுகிறார்.

இறைவி தன் திருவடிகளில் சிலம்பை அணிந்திருக்கிறாள். "சிலம்பணி கொண்ட செஞ்சீறடி பங்கன்" என்று திருக்கோவையாரில் மாணிக்க வாசகர் பாடுகிறார். அம்பிகை ஊடல் கொண்ட போது அந்தச் சிலம்பு கல்கல் என்று ஒலிக்கக் கடுக நடை நடந்து இறைவனிடத்திலிருந்தும் அகன்று செல்கிறாள்.



அப்போது அந்தப் பிராட்டியின் ஊடலைப் போக்க இறைவன் எண்ணுகிறான்.

சிலம்படியாள் ஊடலைத் தான்தவிர்ப்பான் வேண்டி

வேறு யாரையாவது அனுப்பிச் சமாதானமான வார்த்தைகளைச் சொல்லி அந்த ஊடலைத் தவிர்க்க அவன் விரும்பவில்லை. அப்படித் தூது அனுப்பி ஊடலைப் போக்குவதும் உண்டு. பரவையார் கொண்ட ஊடலைத் தவிர்க்கச் சுந்தரமூர்த்தி நாயனாருக்காக இறைவன் தூது சென்ற வரலாறு பெரியபுராணத்தில் வருகிறது.

இங்கே அப்படிச் செய்யாமல் தானே முயன்று பிராட்டியின் ஊடலைத் தவிர்க்க எண்ணுகிறான் இறைவன். அவளுடைய சிலம்பை அணிந்த அடியில் வீழ்ந்து வணங்குகிறான். அம்பிகையின் திருவடிகளில் செம்பஞ்சுக் குழம்பைப் பூசியிருக்கிறாள். இறைவன் வணங்கும்போது அந்தக் குழம்பு அவன் திருமுடியில் படுகிறது.

இறைவனுடைய சடைமுடி இயல்பாகவே சிவப்பாக உள்ளது. இப்போது அம்பிகையின் திருவடியில் பூசிய செம்பஞ்சுக் குழம்பு பட்டுப் பின்னும் சிவப்பாகத் தோன்றுகிறது. அது பார்ப்பதற்கு அழகாக, நலம் பெற்று விளங்குகிறது. அந்தச் சிவப்பு, அந்தரங்கத்தில் நிகழ்ந்த செயலை விளம்பரப்படுத்திவிடுகிறது!

(தொடர்ச்சி 23-ஆம் பக்கம் பார்க்க)




# அன்னத்தை வென்ற ஆந்தை

சரஸ்வதி

ஒரு நாள் நண்பகல் நேரத்தில் ஓர் ஆந்தை ஒரு மரத்தின்மீது உட்கார்ந்திருந்தது. அப்போது திடீரென்று எங்கிருந்தோ ஓர் அன்னப்பறவை பறந்து வந்து ஆந்தையின் அருகில் உட்கார்ந்தது. வெயிலில் பறந்து வந்த களைப்பினுல் அது மிகவும் சோர்ந்து காணப்பட்டது. அன்னம் தனக்குத் தானே, "அப்பா! என்ன வெயில்! இன்று சூரியன் மிகவும் கடுமையாக ஒளிவீசிக் கொண்டிருக்கிருன்!" என்று சொல்லிக் கொண்டே தன் சிறகுகளை விரித்துச் சோம்பல் முறித்தது.

அன்னம் கூறியதைக் காதில் வாங்கிக்கொண்ட ஆந்தை, "என்ன! சூரியனு? யார் அவன்? அவன் எங்கே இருக்கிருன்? இப்போது உஷ்ணமாக இருப்பதென்னவோ உண்மைதான்! ஆனுல் இந்த வெப்பம் இருள் அதிகமாவதனுல் அல்லவா ஏற்படுகிறது?" என்று கூறியது.

ஆந்தையின் அறியாமை நிறைந்த வார்த்தைகளைக் கேட்ட அன்னம், பகல், இரவு என்ற சொற்களின் கருத்தை அதற்கு விளக்க முயன்றது.

அன்னம் ஆந்தையிடம், "சூரியன் ஆகாயத்தில் இருக்கிருன். அவனுடைய கிரணம் உலகில் பரவுகிறது. அப்போதுதான் வெயில் அதிகமாகி நாம் உஷ்ணத்தை உணர்கிறேம். சூரியனின் ஒளிதான் வெப்பம்" என்று விளக்கமாகக் கூறியது.

அன்னத்தின் பதிலைக் கேட்ட ஆந்தைக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. அது உடனே அன்னத்திடம், "அடே! நீ என்ன புதிதாகச் சூரிய ஒளி என்ற வார்த்தையைத் தோற்றுவிக்கிருய்? நீ நிலவு வெளிச்சத்தையும் சந்திரனையும் பற்றிப் கூறினுல் என்னுல் புரிந்துகொள்ள முடியும். இதோ பார்! உன்னைப் பார்த்தால் எனக்கு மிகவும் பரிதாபமாக இருக்கிறது. யாரோ உன்னை நன்ருக ஏமாற்றியிருக்கிருர்கள்! சூரியன் என்றே, சூரிய ஒளி என்றே உலகில் எதுவும் கிடையாது. அதை நீ முதலில் தெரிந்து கொள்!" என்று சொல்லியது.

அன்னம் எவ்வளவுக்கு எவ்வளவு முயற்சி செய்து ஆந்தைக்குப் புரிய வைக்க முயன்றதோ, அதைப் போலப் பல மடங்கு ஆந்தையின் பிடிவாதமும் வளர்ந்தது.

கடைசியாக ஆந்தை அன்னத்திடம், "இந்தச் சமயத்தில் எனக்குப் பறப்பது மிகவும் கஷ்டமாக இருந்தாலும் உன்னேடு பறந்து வருகிறேன். நீ என்னுடன் வா. இங்கு அருகிலுள்ள அடர்ந்த காட்டிற்குள் செல்வோம். அங்கே ஒரு பெரிய ஆலமரம்

இருக்கிறது. அதில் என் இனத்தவர்கள் நூற்றுக்கணக்கில் வசிக்கிறார்கள். அவர்கள் மிகவும் சிறந்த அறிவாளிகள். அவர்களிடம் நம் வழக்கைத் தெரிவித்து நியாயம் கேட்போம்'' என்று கூறியது.

அன்னமும் ஆந்தை கூறிய யோசனைக்கு ஒப்புக்கொண்டது. இரண்டும் பறந்து சென்று ஆலமரத்தை அடைந்தன.

தன் இனத்தவரைக் கண்டதும் ஆந்தை மிகவும் உற்சாகத்தோடு உரத்த குரலில், ''இந்த அன்னம் சொல்வதைக் கேளுங்கள்! ஆகாயத்தில் சூரியன் என்று ஒன்று இருக்கிறதாம்! அந்தச் சூரியன் இப்போது ஒளியுடன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறதாம். அதன் ஒளிதான் உலகில் பரவுகிறதாம்! அந்த ஒளிதான் வெப்பம் என்று இந்த அன்னம் 'விளக்கம்' சொல்கிறது!'' என்று கூறியது.

அந்த ஆந்தை சொன்னதைக் கேட்டவுடன் அங்கிருந்த அத்தனை ஆந்தைகளும் வாய்விட்டுக் கடகடவென்று சிரித்தன. பிறகு ஒரே கூச்சல் இட்டுக்கொண்டு கத்த ஆரம்பித்தன. ''என்ன பைத்தியக்காரத்தனம்! சூரியன் என்ற ஒன்று கிடையவே கிடையாது! அதைவிடவும் பெரிய பொய், சூரிய ஒளி என்பது. இந்த முட்டாள் அன்னத்தோடு சேர்ந்து நீயும் முட்டாளாகிவிடாதே!'' என்று சொல்லிக்கொண்டே அவை அந்த ஆந்தையையும் தங்கள் பக்கம் இழுத்துக்கொண்டன.

அத்தோடு நில்லாமல் ஆந்தைகள் எல்லாமாக ஒன்றுசேர்ந்து அன்னத்தை அடிக்கப் பறந்து வந்தன.

அந்த நேரம் பகற்பொழுதாக இருந்தும் ஆந்தைகள் வாழ்ந்த பகுதியில் மரங்களின் அடர்த்தி காரணமாகச் சூரிய ஒளியே தெரியவில்லை. ஆந்தைகளால் வெளியில் ஒன்றையும் பார்க்க முடியவில்லை. அன்னம் நிலைமையைப் புரிந்துகொண்டது. அது தப்பிப் பறந்து செல்ல அதிக நேரமாகவில்லை.

அன்னம் தப்பித்தோம் பிழைத்தோம் என்று பறந்துகொண்டே, ''பொதுவாக அதிகப்பட்ச அபிப்பிராயத்தினால் மட்டுமே சத்தியம் அசத்தியம் ஆகிவிடாது. என்றாலும், ஆந்தைகளின் அபிப்பிராயம் அதிகமாக ஒப்புக்கொள்ளப்படும் இந்த இடத்தில் எந்த அறிவாளியாலும் உண்மையை நிரூபிக்க முடியாது'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டது.

**கதையின் கருத்து :**

உலகில் பலர் சொல்கிறார்கள், செய்கிறார்கள் என்பதனால், அதர்மத்தைத் தர்மமாக எடுத்துக்கொண்டு வாழக்கூடாது. சிலர் சொல்லும் கருத்து என்பதனால், மகான்களின் தார்மிகக் கருத்துக்களை நாம் புறக்கணித்துவிடக் கூடாது. சான்றோர் சிலராகவும் மூடர் பலராகவும் இருப்பது உலகின் இயல்பு. தண்ணீரைக் களைந்து பாலை ஏற்கும் அன்னம் போல், பொய்யை விலக்கி உண்மையைக் கைக்கொள்ள வேண்டும். ☆

ரமண ஸ்மரணம் :

# ஆதிரையும் அருணாசலமும்

ரா. கணபதி

ஆதியும் அந்தமும் அற்றவன் இறைவன். அவன் திருவிளையாட்டிலே நம்மைக் காலத்தில் கட்டிப் போட்டிருக்கிறான். நாம் காலத்தை ஆண்டு என்ற கரையில் கட்டி அளவைப்படுத்துகிறோம்.

புது ஆண்டு, 1980, ஆதியும் அந்தமும் அற்றவன் நம் பொருட்டுக் கருணையால் தன்னையும் கட்டுப் படுத்திக் கொண்டு காட்சி கொடுத்த ஆதிரை நன்னாளில் பிறக்கிறது.

திருவாதிரைத் திருவபிஷேகம் இந்த ஜனவரி முதல் தேதி இரவு நடக்கிறது. மறுநாள் ஆர்த்ரா தரிசனம். 'ஆர்த்ர' என்பதே 'ஆதிரை' என்றா



யிற்று. 'ஆர்த்ர' என்றால் 'நனைந்த' என்பது பொருள். மணிக்கணக்கான திரு முழுக்காட்டிலே நனைந்த பெருமான் அருளில் நனைந்த இதயத்தோடு அடியாரைப் பாவிக்கும் வைபவமே திருவாதிரை.

திருவாதிரை என்றதும் தில்லை நடேச்வரன் நினைவே வரும். ஜகமே மார்கழிப் பனியில் நனைந் துள்ள வேளையில், பூர்ணிமா சந்திரனும் அமுதப் பெருக்கை அதனோடு கூட்ட, அப்போது குளிரக் குளிரச் சந்தனாபிஷேகம் பெறும் கூத்தப்பிரான்தான் நாம் அறிந்த அளவில் திருவாதிரை நாயகன்.

இவன் குளிர்ந்த சிவன். ஆனால் சிவன் என்ற வுடன் சந்தனமாக எண்ணாமல் செந்தழலாகவே பாவிப்பதும் பழக்கமாயிருக்கிறதே! வேதங்களின் படியே அக்னி-ருத்ர ஐக்கியம் நிலை நாட்டப்படு கிறதே! தேவாரமும் 'தீயவன் காண்!' என்கிறதே!

தீயாக அவன் நின்றது திருவண்ணாமலையில்; தில்லையிலல்ல-தில்லை அருவமாம் ஆகாச க்ஷேத்ரம்; ஆட்டமற்ற அமைதியின் எல்லை. விந்தையாக அங்கேதான் உருவ ஸௌந்தரியத்தில் தன்னி கரில்லா நடராஜராஜனாகி, ஆட்டமான ஆட்டம் ஆடுகிறான்! ஆட்டத்தில் ஆடாமை, தூங்காமற் தூங்குவது, அதுதான் அவன் பெருமை. ஞானப் பெருமக்கள் எய்தும் அநுபவ சிகரமாம் ஸஹஜ ஸமாதி என்பது அதுவே.

வாஸ்தவமாகவே இப்படி ஓர் உயர்நிலை உண்டா, அல்லது இது வேதாந்தம் செப்பும் புனைந்துரை மட்டுமேயா என்ற ஐயத்தைக் களைந்து அண்மை யில் உயிருதாரணமாக ஸஹஜ ஸமாதியை வாழ்ந்து காட்டியவர் ஐயன் ரமண பகவான்.

''ரமண'' என்பது தன்னில் தானே ரமித்துக் கொள்ளும் உள்நிலை—அமைதியில் அமைதியான ஆகாச அருவ நிலை. ''பகவான்'' என்பதோ ஆறுவிதப் பேராற்றல்களாகிய ''பக''ங்களைக் கொண்டு அண்ட சராசரங்களை ஆண்டு நிற்கும் நிலை. இது அமைதியல்ல; அமர்க்களம். சாந்த மல்ல; சலனம். ஆகாச ஸூக்ஷ்மமல்ல; ஸ்தூல கோலாஹலம். உருவங்களை, பெயர்களைக் கொண்ட நாம ரூபப் பிரபஞ்சத்தை நடத்தும் நிலை. எனவே இது உள்நிலை அல்ல. வெளியே ஒன்றிருப் பதாக பாவித்து அதனை ஆட்டிப் படைத்து நிர்வஹிக் கும் சதுரம் இந்த பகவத்வத்தில் பிரகாசிக்கிறது.

ரமணர் தம்மையே ஆண்டு கொண்டவர். அதனால் நமக்கு வெளி போலத் தெரிவது அனைத் தும் தோற்றம் மாத்திரமே என்ற அநுபவத்தில் தோய்ந்து விட்டவர். எனவே அதனை ஆண்டு நிர்வஹிக்க வேண்டும் என்றோ, நல்வழிப்படுத்த வேண்டும் என்றோகூட எண்ணாதவர். 'லோக நிர்வாஹம், அதை உத்தாரணம் செய்வது எல்லாம் ஈச்வரனாகிய ஸகுணப் பிரம்மத்தின் பொறுப்பும் கடமையுமே. அதிலே பொறுப்பேற்பதோ, அவ் விஷயமாக அக்கறையும் விசாரமும் காட்டுவதோ நம் காரியமில்லை' என்பதாகக் கருதி, பிரம்மஞான அதி உன்னதத்திலேயே இறைவனுக்கு அடங்கி, ஒடுக்கமாக ஒதுக்கமாக நிற்கும் அதி விநயத்தை அதிசயமாகக் கூட்டி வாழ்ந்த அற்புதர் அவர். மற்றோரை உத்தாரணம் செய்யவேண்டும், பிறருக்கு உதாரணமாக வாழ்ந்து காட்ட வேண்டும் என்ற இச்சையுமற்ற ஸங்கல்ப ரஹிதர் அவர். ஆனால் விந்தை! ஈச்வர ஸங்கல்பமோ இவர் மூலமே ஆதரிச மானுடரின் அத்தனை நல்லியல்புகளையும் அற வொழுக்கங்களையும் வாழ்ந்து ஏனையோர்க்குக் வழி காட்ட வேண்டும் என்பதாக இருந்தது. எனவே தம்மையறியாமலே அவர் பிரேம மயமாக, தர்ம மய மாக ஒரு 'வெளி' வாழ்வையும் நடத்திக் காட்டினார். ஸங்கல்ப ரஹிதர் என்பதால் நிர்விகல்ப ஸமாதியில் ஆடாமல் அசையாமல், வெளிப் பிரக்ஞையின்றி அவர் இருந்துவிட இறைவன் விடவில்லை. ஆதியில், யௌவனத்தில் பாதாள லிங்க குகையிலும், மாந்

தோப்பிலும், விருபாக்ஷி குகையிலும், பவளக் குன்றிலும் அவர் அப்படி அடித்த சிலையாக இருந்த நாட்களும் உண்டுதான். ஆனால் பிற்பாடு ஸ்கந்தாச்ரம காலத்திலிருந்து, ரமணாச்ரமம் தோன்றி வளர்ந்து, அவர் விதேஹ கைவல்யம் எய்தியவரையில் வெளி உலகுக்கு முன்னுதாரணமென அன்பு விக்ரஹமாக, அறவொழுக்கப் பிரதிமையாக வாழ்ந்தார். ஆறு பேராற்றல்களான பகங்களுக்கும் ஆதாரம் இந்த அன்புதான். அவ்வன்பு வெளிப்படும் மொழி அல்லது வழி அறமே. எனவே, வேறு பல மஹா புருஷர்களையும் அவதாரர்களையும் வித்த சிரேஷ்டர்களையும் போல் அவர் ஐச்வரமான சக்திகளை, பகங்களை, காட்டாத போதிலும் அவர் பகவான்தான்.

'ரமண-பகவான்' என்கையில் 'ஆகாசத் தில்லை வெளி-ஆடும் அழகு நடேச்வரன்' இரண்டையுமே சுட்டுகிறோம். நடராஜனின் அழகுதான் அன்பு; அவனது ஆட்டமே தர்மம். இவற்றை ஒரு மலர் மணம் வீசுவது போலத் தன்னியல்பாகப் பரப்பிய ரமண பகவான் நூற்றாண்டுகளுக்கு முன்பு, திருச்சுழி நடராஜப் பெருமான் திருவாதிரைத் திருவீதி உலா முடித்து மறுநாட் காலை ஆலயத்துள் பிரவேசித்த சமயத்திலேதான் இவ்வுலகில் வந்து உதித்தார்.

''ஸ்ரீராமகிருஷ்ண விஜய''த்தில் ஸ்ரீ ரமண விஜயத்தைப் பற்றி எழுதுவது நினைக்கப் புல்லரிக்கிறது.

''காளி காளி'' என்று பக்த சிகாமணியாக விளங்கிய குருமகராஜ் பரம ஞான அத்வைதியுந் தான். சுவாமி விவேகாநந்தர் மாயாவதியில் எழுப்பிய ஆசிரமம் அத்வைத ஆசிரமமாக, எவ்வித பூஜா - புரஸ்காரமுமின்றி ஞான - தியானத்துக்கே இடமாக அமைய வேண்டுமென விதித்த போது அதனை ஆக்ஷேபித்த ஒருவர் ''ஸுப்ரீம் கோர்ட்'' டாகிய அன்னை சாரதையிடம் 'அப்பீல்' கொடுத்தார். அம்மா, 'நரேனின் ஏற்பாட்டில் தப்பு இல்லையே! டாகூர் பூர்ண அத்வைதி தானே?' என்றாராம்.

ரமண பகவரோ அத்வைத ஞான மஹாநுபூதிமானாகவே பெரிதும் கருதப்பட்டாலும் பரம பக்தியில் தோய்ந்தவர்.

எனவே ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய ஏட்டில் ரமணரைப் பற்றி எழுத நேரிட்டது மிகவும் பொருத்தம்.

குருமகராஜ் பக்தியில் பூர்ணசந்திரனாகக் குளிர்ந்திருந்தாலும், அதன் தண்ணிலவு ஞான ஸூர்யனின் பிரதிபலிப்பின்றி வேறில்லை. தாவரத்தைக் கருக்குவதாகத் தோன்றும், கதிரவனின் கதிரே அதில் இலைப் பச்சையாம் இன்ஸாரமூட்டுவதேபோல் மஹர்ஷிகளின் ஞானஜோதி பக்திப் பசுமையை வாரிச் சொரிகிறது.

ஆதிரைக்கு ஆகாச சிதம்பரத்தின் ஸம்பந்தத்தைப் பார்த்தோம். ஆனால் ஆதிரையை அடுத்து அவதரித்த ரமணர் தேயுத்தல அருணாசலத்திலேயே நிலைத்தவர். கார்த்திகை தீபோத்ஸவத்துடன்தான் நாம் இப்போது திருவண்ணாமலையைத் தொடர்புறுத்துகிறோம். கார்த்திகை விழாவுடன் மார்கழித் திருவாதிரையும், அது மட்டுமின்றிப் பரமேச்வரனுக்குரிய மற்றொரு பெரு நாளாகிய மாசி மாத சிவராத்ரியும் தொடர்பு கொண்டுள்ளன என்று ரமணர் வாக்கிலிருந்து தெரிகிறது. நமது 'ரமண ஸ்மரண'த்தொடர் இந்த அருள்மொழியில் தொடங்கி அருணாசல ஸ்மரண மாகட்டும். 'ஸ்மரணாத் அருணாசலம்'—அண்ணாமலையை நினைக்க முத்தி' என்பார்கள். சிதம்பரத்தில் தரிசனம் செய்வதும், கமலையில் (திருவாரூரில்)பிறப்பெடுப்பதும்,காசியில் மரிப்பதும், அருணையை நினைப்பதுமே முக்தி என்பது ஆன்றோர் மொழி.

**1947** செப்டெம்பர் 20-ந்தேதி. பகவான் ரமணர் அடியாரோடு உரையாடுகையில் கார்த்திகை—திருவாதிரை—சிவராத்ரித் தொடர்பையும், இம் மூன்றுக்கும் அண்ணாமலையோடு உள்ள தொடர்பையும் விவரித்தார்.*

அண்ணாமலையை அக்னி க்ஷேத்ரம், தேயுத்தலம் என்கிறோமாயினும் அது மண்ணாலான மலையாகத் தானே உள்ளது, தீயாக இல்லையே என்று ஒருவர் கேட்டார்.

''மனிதக் கண்ணுக்கு அது மண்ணும் கல்லாயும் தெரிந்தாலும், அது உண்மையில் ஜ்யோதி ஸ்வரூபமே'' என்றார் பகவான்.

'அண்ணாமலை' என்ற பதத்துக்குப் பொருள் எவரோ வினவ, '' 'அண்ணா' என்றால் 'அண்மையில் வர முடியாத,' அதாவது 'நெருங்க முடியாத' என்று அர்த்தம். பிரம்ம விஷ்ணுக்களால் அடி முடி காண முடியாத ஜ்யோதியாக ஈச்வரன் நின்றதால் இப்படிப் பெயர். பிரம்ம-விஷ்ணுக்கள் அடைய முடியாதது என்றால் என்ன அர்த்தம்? வாக்தேவியின் நாயகர் பிரம்மா. அதனால் அவர் வாக்கைக் குறிக்கிறார். மஹா விஷ்ணுதான் மனஸின் மாயா விலாஸங்களுக்குக் காரணம். ஆகையால் 'பிரம்ம-விஷ்ணு அடைய முடியாத சிவம்' என்றால் 'வாக்காலும் மனஸாலும் அறிய முடியாத பிரம்மம்' என்று அர்த்தம்'' என்றார் ஸ்ரீ ரமணர்.

---

*இனி வரும் பகுதி மாதுஸ்ரீ ஸூரி நாகம்மா அவர்களின் நேர்முக வருணனையை அடிப்படையாகக் கொண்டது.

"ஆனால், தற்போதுள்ள மலையோ அண்ணாததாக இல்லாமல், உருவத்தோடு கூடியதாக, எவரும் நெருங்கி ஏற முடிவதாக இருக்கிறதே!" என்ற கேள்வியை ஓர் அடியார் எழுப்பினார்.

இதன் மீதுதான் பகவான், பரமேச்வரன் முதலில் அண்ணாத அக்னி ஸ்தம்பமாயும், பின்னர் அண்ணும் மலையாகவும், லிங்கமாயும், அதன் பின் கர–சரணாதி அவயவங்களோடு சிவ மூர்த்தமாயும் ஆவிர்பவிப்பதைப் பற்றிச் சொன்னார்—இதிலேயே திருக்கார்த்திகை, திருவாதிரை, சிவராத்ரி விழாக்களைப் பற்றிய விளக்கமும் கிடைத்து விட்டது.

பகவான் பகர்வார்: "பிரம்ம விஷ்ணுக்களுக்கு முன்பு ஒரு கார்த்திகை மாதக் கிருத்திகா நக்ஷத்திரத்தன்று பரமசிவம் ஒரு ஜ்யோதி ஸ்தம்பமாகத் தோன்றிற்று. அதன் அடியும் முடியும் காண முடியாமல் பிரம்மாவும் விஷ்ணுவும் பிரார்த்தித்தார்கள். அப்போது சிவபெருமான் ஜ்யோதி ஸ்தம்பத்துக்குள் தம்முடைய ரூபத்தைக் காட்டி அவர்களைக் கருணையோடு ஆசீர்வாதித்தார். அண்ட முடியாத அக்னித் தூணாயில்லாமல், அருகில் வரும்படியாக அவர் எப்போதும் உருவம் கொள்ள வேண்டும் என்று அவர்கள் வேண்டிக் கொண்டார்கள். பரமசிவன் அதற்கு இணங்கி, 'அக்னி ரூபத்தை மாற்றி அருணாசல மலையாக விளங்குவேன். அது மட்டுமின்றி அருணாசலேச்வர லிங்கமாகவும் ரூபம் கொள்வேன். இந்பி ரூபங்களில் என்னை வழிபட்டீர்களானால், பிற்பாடு லிங்கத்திலிருந்தே அவயவங்களுடன் ருத்ர ரூபத்தில் உத்பவிப்பேன். உங்களுக்கு எல்லா விதங்களிலும் துணைபுரிவேன்' என்று கூறினார். உடனே அந்தர்தானமானார்.

"அக்னி ஸ்தம்பமாக இருந்தவர். சொன்னபடியே தநுர்மாஸத்தில் திருவாதிரை நக்ஷத்ரத்தன்று அருணாசல மலையாகவும், அருணாசலேச்வர லிங்கமாகவும் ஆவிர்பவித்தார். பிரம்மாவும் விஷ்ணுவும் ஈச்வரன் விதித்தபடி அந்த லிங்கத்தை ஆராதனை செய்து வந்தார்கள். வருஷாவருஷம் லிங்கம் தோன்றிய மார்கழித் திருவாதிரையில் விசேஷமாக வழிபாடு செய்தார்கள். பின்னர் ஒரு கும்ப மாஸத்தில்—அதாவது மாசியில்—தேய்பிறைச் சதுர்த்தசியன்று நடுநிசியில், சிவபெருமான் அந்த லிங்கத்திலிருந்து அவயங்களோடு கூடிய திவ்ய மூர்த்தியாக வெளிப்பட்டார். அவரை பிரம்ம—விஷ்ணுக்களும் மற்ற தேவதைகளும் பூஜித்தனர். அதுவே சிவராத்ரி என்று பெயர் பெற்றது.

"இதுவே லிங்க புராணம், சிவ புராணம் முதலியவற்றில் உள்ள விருத்தாந்தம். (அருவுருவ) லிங்கத்திலிருந்து (உருவ) மூர்த்தி தோன்றிய சிவராத்ரியிலிருந்தே எல்லோரும் ஈச்வரனை லிங்கமாக ஆராதிக்க ஆரம்பித்திருக்கிறார்களென்று தோன்றுகிறது.

"சிவம் எடுத்துக் கொண்ட முதல் லிங்க வடிவம் திருவண்ணாமலையிலுள்ள அருணாசலேச்வரர்தான் என்று ஸ்கந்த புராணத்தில் அழுத்தமாகச் சொல்லி இருக்கிறது."

எவ்வாறேனு தில்லை நாயகன் திருவாதிரையைத் தனதாக ஸ்வீகரித்துக் கொண்டு விட்டாலும், ஆதியில் அது ஜ்யோதி அருணாசலத்துடனேயே இணைந்திருக்கிறது. திருவாதிரையைப் பற்றி இதுவரை நாம் அறியாத விவரம்!

சிவராத்ரி பற்றி நாம் நினைப்பது அன்றுதான் லிங்கோத்பவம் நிகழ்ந்தது என்பதேயாகும். ஆனால் பகவான் சொல்வதிலிருந்து மார்கழித் திருவாதிரையில்தான் லிங்கம் உத்பவித்ததென்றும், சிவராத்ரியன்று அந்த ரூபாரூப லிங்கத்திலிருந்து ரூப சிவ மூர்த்தி உத்பவித்தார் என்றும் ஆகிறது.

சிவாலயங்களில் உள்ள லிங்கோத்பவ மூர்த்தி சிவராத்ரிச் சிறப்புப் பொருந்தியதாகக் கருதப்படுகிறது. அதிலே லிங்கத்துக்குள் அடி–முடி அடங்கா ஒரு மூர்த்தியும், மேலே ஹம்ஸ வடிவ பிரம்மனும் கீழே வராஹ வடிவ விஷ்ணுவும் இருப்பார்கள். அதைக் கண்டும் காணாமலே இந்நாள் வரை சிவராத்ரியில் சிவமூர்த்திதான் லிங்கமாக உத்பவித்தார் என்று எண்ணி வந்திருக்கிறோம். ஆனால் ரமணர் கூறிய புராணக் கதையைக் கேட்ட பின், முதலில் சிலையில் வடிக்கவொண்ணாத அருப சிவம்; அடுத்து அருவும் உருவுமான லிங்கம்; அதன் பின்பே அவயவம் கொண்ட உருவ சிவன் என்பதுதான் பொருத்தமாகப்படுகிறது. இதைக் கருத்தில் கொண்டு லிங்கோத்பவ மூர்த்தியைப் பார்க்கையில், 'ஆஹா, இந்தச் சிலை பகவான் வாக்குக்கு இசையத்தானே உள்ளது? மூர்த்திக்குள் லிங்கத்தைக் காட்டாமல், லிங்கத்துக்குள் தானே மூர்த்தியைக் காட்டியிருக்கிறது? எனவே லிங்கோத்பவ மூர்த்தி என்பது உண்மையில் லிங்கத்தை உத்பவித்த மூர்த்தியன்று; லிங்கத்திலிருந்து உத்பவித்த மூர்த்தியே ஆவார். இப்படி மூர்த்திகரித்தாலும் இதுவும் அளவைக் கடங்கா அருவத்தின் அடையாளமே என்று காட்டத்தான் இம் மூர்த்தியின் அடியும் முடியும் சிலையில் அடங்காததாகக் காட்டியிருக்கிறது என்று புரிகிறது.

அடிமுடி இல்லா ஆன்ம பூர்ண ரமணரின் அடிகளைப் பகிர்ந்து இதனை முடிக்கலாம். ☆

# காசியில் விவேகானந்தர்

சுவாமி ராகவேசானந்தர் தமிழாக்கம் : வி. சந்திரசேகர்

பக்தர்கள் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்வதன் மூலம் தங்களது ஆன்மிக வாழ்க்கையை மேலும் வளப்படுத்திக் கொள்கிறார்கள். அனுபூதி எய்திய மகான்கள் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்வது அந்த க்ஷேத்திரங்களின் மகிமையை மேலும் மிகுதிப்படுத்துவதாகவே அமைகிறது.

காசி புண்ணிய க்ஷேத்திரங்களிலேயே முதலாவது இடத்தை வகிக்கிறது. அநாதி காலமாக அந்த க்ஷேத்திரத்திற்கு மகான்களும் பக்தர்களும் விஜயம் செய்தபடியே இருக்கிறார்கள். ஏறத்தாழ இந்தியாவில் தோன்றிய மதாசார்யர்கள் அனைவருமே யாத்திரை செய்த ஒரு புண்ணிய க்ஷேத்திரம் உண்டென்றால் அது காசி க்ஷேத்திரம் ஆகும்.

விவேகானந்தர் பிறப்பதற்கு முன்பு புவனேசுவரி தேவி பிள்ளைவரம் வேண்டிக் காசியிலுள்ள வீரேசுவரரைப் பிரார்த்தித்துக் கொண்டாள். (காசியில் விசுவநாதர் கோவில் வேறு, வீரேசுவரர் கோவில் வேறு.) யோகநிலையிலிருந்து சிவபெருமான் ஒரு குழந்தையாக வடிவம் கொண்டதாகவும், ஒளி வெள்ளம் தன்னுள் புகுவது போன்றும் புவனேசுவரிதேவிக்கு ஓர் ஆன்மிக அனுபவம் ஏற்பட்டது. இந்த அனுபவத்தின் மூலம் சிவபெருமானே தனக்கு மகவாக வந்து பிறக்கப்போவதாகப் புவனேசுவரி தேவி நம்பினாள்.

ஒரு சமயம் ஸ்ரீராமகிருஷ்ணர் தியானத்தில் இருந்தபோது காசியிலிருந்து ஓர் ஒளி புறப்பட்டுக் கல்கத்தாவுக்குள் நுழைந்ததைக் கண்டார். அதன் மூலம் நரேந்திரர் பிறக்கப்போவதை முன்கூட்டியே உணர்ந்த அவர், ''என் மனிதன் பிறந்துவிட்டான்!'' என்று ஆனந்தத்தால் கூவினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரரைச் சிவாம்சம் என்றே கருதினார். நரேந்திரரைப்பற்றி எவராவது தவறாகப் பேசினால், 'நீ சிவநிந்தனை செய்கிறாய்' என்றும், நரேந்திரரைத் தரிசிப்பதைச் 'சிவதரிசனம்' என்றும் ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிட்டிருக்கிறார்.

சுவாமி விவேகானந்தருக்கு இளமைப்பருவத்திலிருந்தே காசி க்ஷேத்திரத்தின்மீது ஓர் அபாரமான பற்றுதல் இருந்து வந்தது 'சிவபெருமானின் இருப்பிடம், துறவிகளும் சாஸ்திரங்களைக் கற்றறிந்த பண்டிதர்களும் நிறைந்த இடம், ஏராளமான பக்தர் விஜயம் செய்தபடியே இருக்கும் க்ஷேத்திரம், தெய்விக மணம் கமழும் பூமி, புத்தரும் ஸ்ரீசங்கரரும் தங்கள் கருத்துக்களைப் பிரசாரம் செய்த இடம், கங்கை பாயும் க்ஷேத்திரம், ஏராளமான ஆலயங்கள் உள்ள இடம்' என்றெல்லாம் காசிக்கு விஜயம் செய்யாத நிலையிலேயே தூரத்திலிருந்து சுவாமி விவேகானந்தர் அடிக்கடி நினைத்திருக்கிறார்.

## முதல் விஜயம்

சன்னியாச வாழ்க்கையை மேற்கொண்ட பிறகு சுவாமிஜி முதல் முறையாகக் காசிக்குச் சென்றார். அங்கு அவர் பிரார்த்தனையிலும் தியானத்திலும் ஆழ்ந்து ஈடுபட்டார். கங்கையில் நீராடும் பக்தர்கள் எழுப்பும் 'ஹரஹர சிவசிவா!' என்ற ஒலி அவரைப் பெரிதும் பரவசத்தில் ஆழ்த்தியது. காசியிலுள்ள மயானங்களில் அவர் மாலைநேரங்களில் தியானம் செய்து வந்தார். காசி விச்வநாதரின் ஆலயத்தில் நடைபெறும் ஆராத்திரிகம் (வழிபாடு) அவரைப் பெரிதும் பரவசப்படுத்தித் தெய்விகத்தில் ஆழ்த்தியது. தெய்விகம் ததும்பும் அந்த மன நிலையுடனே அவர் தமது இருப்பிடம் திரும்புவார். காசியில் அவர் தங்கியிருந்த காலத்தில் மதுகரி பிக்ஷையின் மூலம் வாழ்ந்து வந்தார். தேனீ பல மலர்களிலிருந்து தேனைத் திரட்டுவது போல, சன்னியாசிகள் ஒவ்வொரு கவளமாகப் பல வீடுகளிலிருந்து தமக்குத் தேவைப்படும் அளவுக்குப் பிக்ஷை ஏற்பதற்கு மதுகரி பிக்ஷை என்று பெயர்.

காசியில் தமது முதல் விஜயத்தின்போது ஒரு வாரகாலம் தங்கியிருந்தபோது சுவாமிஜி பல சன்னியாசிகளையும் பெரும் பண்டிதர்களையும் சந்தித்து உரையாடினார்.

ஸ்ரீ ரா. கணபதி அவர்கள் எழுதிய சுவாமி விவேகானந்தரின் விரிவான வாழ்க்கை வரலாற்றைச் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடம் வெளியிட்டுள்ளது. அதில் காசியைப்பற்றிக் குறிப்பிடும் பகுதிகள் வருமாறு:—

காசியில் துவாரகாதாஸ் என்பவரின் ஆசிரமத்தில் சுவாமிஜி தங்கியிருந்தார். பிரசித்தி பெற்ற பண்டி தரும் எழுத்தாளருமான பூதேவ்சந்திர முகோபாத்தி யாயர் என்பவருக்கு சுவாமிஜியை அறிமுகம் செய்தார் துவாரகாதாஸ். அவரோடு சுவாமிஜி பல விஷயங்களைப்பற்றி உரையாடிக்கொண்டிருந்தார். ''இந்தச் சிறிய வயதிலேயே எவ்வளவு அனுபவமும் தீர்க்கதிருஷ்டியும் இவருக்கு இருக்கின்றன! இவர் ஒரு மகாபுருஷராக விளங்கப்போகிறுர்'' என்று முகோபாத்தியாயர் நரேந்திரரைப் பற்றிக் கூறினர். சுவாமிஜியைக் குரங்குகள் துரத்திய நிகழ்ச்சி காசி யில் நடைபெற்றதே ஆகும்.

காசியில் வசித்து வந்த த்ரைலிங்க சுவாமி என்பவரையும் சுவாமிஜி தரிசித்தார். எப்போதும் தவத்தில் ஆழ்ந்து வெளிவியாபாரங்களில் நினைவே செல்லாத பெரியவர் த்ரைலிங்க சுவாமி. பல ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீராமகிருஷ்ணரும் இவரைத் தரிசித்ததுண்டு.

பாஸ்கரானந்தர் என்று புகழ்வாய்ந்த சாது ஒருவர் காசியில் வாழ்ந்து வந்தார். அவர் கல்விகேள்வி களில் மிகவும் சிறந்தவர். அவரையும் சுவாமிஜி கண்டு உரையாடினுர். பொன்னுசை பெண்ணுசை யைப் பற்றிப் பேச்சு நடந்தது. இந்த இரண்டு ஆசைகளையும் நீக்க வேண்டும் என்று பரமஹம்சர் தம் சிஷ்யர்களிடம் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வந்திருக்கிறுர். இதையெல்லாம் பற்றிப் பேச்சு நடந்தபோதுபாஸ்கரானந்தர் சற்றே அலட்சியமாக, ''பொன்னுசை பெண்ணுசையை விட்டுவிட வேண் டும் என்று எவ்வளவு வேண்டுமானுலும் பேசலாம். ஆனுல் உண்மையில் அவற்றைத் துறந்தவர் யாரும் கிடையாது'' என்ருர். ''ஏன் அப்படிச் சொல்கிறீர் கள்? எவ்வளவோ ஞானிகள் இந்த ஆசைகளை அறவே களைந்திருக்கிருர்கள். அப்படிப்பட்ட ஒருவரையேனும் நானே என் கண் முன்னுல் கண்டதுண்டு'' என்று சுவாமிஜி உணர்ச்சி ததும்பக் கூறினுர். சற்றே பரிகாசம் நெளியப் புன்னகை செய்தார் பாஸ்கரானந்தர். சுவாமிஜிக்கு ஆத்திரம் வந்துவிட்டது. அந்த இடத்தை விட்டு வேகமாக அகன்ருர் அவர்.

'மனிதன் கடவுளாக முடியும்' என்று நம்பிய வர்கள் வேத முனிவர்கள் தொட்டுச் சமீபத்தில் அவதரித்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் வரையுள்ள ஞானிகள். அந்த நம்பிக்கையைப் பூரணமாகப் பெற்றவர் சுவாமிஜி. எனவே துறவற வாழ்க்கை மேற்கொண்ட பாஸ்கரானந்தர், 'யாராலும் ஆசை களைக் கடக்க முடியாது' என்று சொன்னதைக் கேட்டவுடன், சுவாமிஜிக்குச் சினம் வந்ததில் வியப்பில்லை அல்லவா?

இந்த முதல் விஜயத்திற்குப் பிறகு சுவாமிஜி பாரநகர் மடத்திற்குத் திரும்பினுர்.*

## இரண்டாவது விஜயம்

வட நாட்டின் பல பாகங்களுக்கும் பரிவ்ராஜக ராகச் சென்றுகொண்டிருந்த சுவாமிஜி இரண்டாம் முறையாக 1880-ஆம் ஆண்டு காசிக்கு விஜயம் செய்தார். இந்த விஜயத்தின்போது அவர் தமது நண்பர் பிரமததாஸ் பாபு என்பவருக்குச் சொந்த மான தோப்பில் தங்கித் தியானம் பழகி வந்தார்.

தியானம், சாஸ்திர ஆராய்ச்சி, கோயில்களுக்குச் சென்று தரிசனம் செய்வது என்ற ரீதியில் சுவாமிஜி யின் வாழ்க்கை சென்றுகொண்டிருந்தது. அப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களான பலராம் போஸ், சுரேந்திரநாத் மித்ரா ஆகியோரின் உடல்நலம் கவலைக்கிடமாக இருப்பதாக, சுவாமிஜிக்குச் செய்தி கிடைத்தது. எனவே அவர் காசியிலிருந்து கல்கத்தா திரும்பினுர்.



காசியில் சுவாமிஜியின் உற்ற நண்பராக விளங்கிய பிரமததாஸ் மித்ரா என்ற அன்பருக்கு, சுவாமிஜி எழுதிய கடிதங்களில் சில பகுதிகள் வருமாறு :—

---

*பிற்காலத்தில் சுவாமி விவேகானந்தர் உலகப் புகழுடன் விளங்கியபோது, பாஸ்கரானந்தரை ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர்ச்சீடர்களுள் ஒருவராகிய சுவாமி நிரஞ்ஜனனந்தர் சந்தித்தார். அப்போது பாஸ்கரானந்தர், ''சகோதரரே, சுவாமி விவேகானந்தரை என்னிடம் எப்படியாவது அழைத்து வாருங்கள். அதன்மூலம் ஒரே ஒரு தடவையாவது அவரை நான் தரிசிக்கிறேன்'' என்று சுவாமி நிரஞ்ஜனனந் தரிடம் கேட்டுக்கொண்டார்.

"உங்களிடமிருந்து தெய்விக நகரமாகிய காசி நகரத்திற்கு வருமாறு அழைப்புக் கடிதம் வந்து சேர்ந்தது. இதை நான் சாக்ஷாத் விசுவேசுவரருடைய வாக்கு எனவே கருதி ஏற்கிறேன். காசி க்ஷேத்திரத்தையும் காசிநாதரையும் கண்டு எவனுடைய மனம் உருகுவதில்லையோ அவன் உண்மையில் கல்லால் ஆனவனேயாவான். முடிவில் எல்லாம் விச்வேசுவரருடைய இச்சைப்படியே நடைபெறும்.

"காசிக்கு வந்துசேர என் மனம் பெரிதும் ஆவல் கொள்கிறது. அங்கே காசியில் சிறிது காலம் தங்கியிருக்க விரும்புகிறேன். பிறகு எளியனாகிய என்னைப் பகவான் விசுவநாதரும் பகவதி அன்னபூரணியும் என்ன செய்யப்போகின்றனர் என்பதைக் காண விரும்புகிறேன். 'உடலை வீழ்த்தவாவது செய்வேன்; அல்லது ஆத்மசாதனை செய்தாவது தீர்ப்பேன்!' என்று நான் பிரதிக்கினை செய்கிறேன். காசிநாதராகிய பகவான் துணை புரிவாராக!

"ஸ்ரீவிசுவேசுவரர் வெல்க! உங்களிடமிருந்து ஒரு கடிதம் வந்ததும், என் திடசங்கல்பம் முற்றும் அகன்றுவிடுகிறது; நானும் என் காரியங்கள் எல்லாவற்றையும் அப்படியே விட்டுக் காசியை நோக்கிப் புறப்பட்டு விடுகிறேன். விசுவேசுவரருடைய இச்சை எதுவோ, அதுவே நிகழும்.

"பகவான் விசுவநாதர் எப்போது எந்த முறையில் எனக்கு ஓய்வு தருவாரோ, அறிகிலேன்! தாங்கள் என்பொருட்டு விசுவநாதரிடம் அந்தத் தேவர் எனக்குப் பலம் அருள வேண்டுமென்று பிரார்த்தனை செய்வீர்களாக."

சுவாமிஜி 1889-ஆம் ஆண்டு டிசம்பரில் பிரயாகையில் தங்கியிருந்தார். அப்போது அங்கிருந்த சில அன்பர்கள் சுவாமிஜியைத் தங்களுடன் சில காலம் தங்கியிருக்க வேண்டினர். அப்போது சுவாமிஜி பிரமததாஸ் மித்திரருக்கு எழுதியதாவது:—

"என் மனமோ 'காசி, காசி' என்று ஜபித்துக் கொண்டே அங்கே செல்லப் பேராவல் நிறைந்ததாக இருக்கிறது. இவர்களுடைய பெரிய நிர்ப்பந்தத்தைத் தவிர்த்துக்கொண்டு வெளியேறி வாராணசி புரபதியின் புனித ராஜ்யத்தில் வந்து சேருவதற்கு முயற்சி செய்கிறேன்."

1890-ஆம் ஆண்டு மே மாதத்தில் சுவாமிஜி தமது யோசனைகள் சிலவற்றைத் தெரிவித்துப் பிரமததாஸ் மித்திரருக்குக் கடிதம் எழுதினர். அந்தக் கடிதம் பின்வருமாறு துவங்குகிறது: "விசுவநாதரிடம் பிரார்த்தனை செய்துகொண்டு நான் கூறுவது பொருத்தமானதா பொருத்தமற்றதா, சாத்தியமானதா அசாத்தியமானதா என்று யோசித்துப் பார்த்து, எனக்குப் பதில் கடிதம் எழுதியருள்வீராக."

## மூன்றாவது விஜயம்

பரிவ்ராஜக வாழ்க்கையின்போது சுவாமி அகண்டானந்தருடன் மூன்றும் முறையாகக் காசிக்கு விஜயம் செய்தார். சில காலம் அங்கே தங்கிவிட்டு ஸ்ரீராமபிரானின் அவதார ஸ்தலமான அயோத்திக்குப் புறப்பட்டார்.

அயோத்திக்குப் புறப்பட்டபோது, காசியில் பிரமததாஸ் பாபுவிடம் சுவாமிஜி, காசி விசுவநாதனும் மாதா அன்னபூரணி தேவியும் தம் எதிர்காலத்தைப்பற்றி அறிவித்து விட்டதே போலத் தெய்விக ஆவேசத்துடன், "அடுத்த முறை நான் காசிக்கு வரும்போது பீரங்கிக்குண்டு போலச் சமூகத்தின் மீது வெடிப்பேன். அது நாய் போல என்னைத் தொடரும்" என்று ஒரு தீர்க்க தரிசனம் போலக் கூறினர்.

அவர் சொன்னது உண்மையே ஆயிற்று. அமெரிக்காவிலிருந்து திரும்பிய பிறகே அவர் நான்காம் முறையாகக் காசிக்குச் சென்றார்.

## நான்காம் விஜயம்

1902ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் ஓடா, ஒகாகுரா என்ற இரண்டு கல்விமான்கள் சுவாமிஜியைக் காண ஜப்பானிலிருந்து பேலூர் மடத்திற்கு வந்திருந்தனர். ஒகாகுரா புத்தகயைக்குத் தம்முடன் வரும்படி சுவாமிஜியை அழைத்தார். அந்தச் சமயத்தில் சுவாமிஜிக்கே காசிக்குச் செல்ல வேண்டும் என்ற எண்ணம் உள்ளூற இருந்ததனால் ஒகாகுராவின் யோசனையை உடனே அங்கீகரித்து, "காசியில் எனக்கு ஒரு தனி ஆகர்ஷணம் இருக்கிறது" என்று குறிப்பிட்டார்.

ஓடா, ஒகாகுரா ஆகியோருடன் புத்தகயை சென்ற சுவாமிஜி அங்கிருந்து நான்காம் முறையாகக் காசிக்குச் சென்றார். அதுவே அவர் காசிக்குச் சென்ற கடைசி முறையாகவும் அமைந்தது.

காசி ரெயில்நிலையத்தில் அன்பர்கள் சுவாமிஜிக்கு மலர்மாலைகளை அணிவித்து வரவேற்றதிலிருந்து, சுவாமிஜி காசியில் தங்கியிருந்தபோது நடைபெற்ற பல சம்பவங்களையும் 'Swami Vivekananda, my

Master (Reminiscences)' என்ற ஆங்கில நூலில் சுவாமி சதாசிவானந்தர் விரிவாக எழுதியுள்ளார்.

ராஜா காளிகிருஷ்ண தாகுர் என்ற பக்தருக்குச் சொந்தமான தோட்டம் சூழ்ந்த ஒரு வீட்டில் சுவாமிஜியும் அவருடன் சென்றவர்களும் தங்கியிருந்தனர். சன்னியாசிகள், தொண்டு மனப்பான்மை கொண்டவர்கள், பக்தர்கள், பண்டிதர்கள், கலைஞர் என்று பலவித மக்கள் அப்போது சுவாமிஜியைத் தரிசித்து அவருடன் உரையாடிப் பயன் பெற்றுர்கள்.

காசியில் சுவாமிஜியிடம் பக்தி கொண்ட பல இளைஞர்கள் ஒன்றுசேர்ந்து 'Poor men's Relief Association' என்ற பெயரில், பிணியுற்ற யாத்திரிகர்களுக்கும் அநாதைகளுக்கும் சேவை புரிந்து வந்தனர். அவர்களின் பணியை சுவாமிஜி மனதார மிகவும் பாராட்டினுர். அவர்களின் பணிக்கு நிதி உதவும்படி பொது மக்களுக்கு வேண்டுகோளும் எழுதி வெளியிட்டார். இந்த இளைஞர் சங்கமே பிற்காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் சேவாசிரமம் என்ற மாபெரும் மருத்துவநிலையமாக மாறியது.

காசியில் சுவாமிஜி தங்கியிருந்தபோது ஒரு நாள் ஸ்ரீகேதார்நாத் கோவிலின் தலைவரின் வேண்டுகோளுக்கிணங்கி அந்தக் கோவிலுக்குச் சென்று வந்தார்.

பிங்க மகாராஜாவையும் சுவாமிஜி காசியில் சந்தித்தார். பிங்க மகாராஜாவின் வேண்டுகோளுக்கிணங்கி, சுவாமிஜி காசியில் ஒரு மடம் நிறுவும்படி சுவாமி சிவானந்தரைப் பணித்தார். அவ்விதம் நிறுவப்பட்டதே காசியிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண அத்வைத ஆசிரமமாகும்.

காசியிலிருந்து சுவாமிஜி பிப்ரவரி மாதத்தில் பேலூர் மடம் திரும்பினுர். அதன் பிறகு அவரது பூவுலக வாழ்க்கை ஐந்து மாதகாலம் மட்டுமே நீடித்தது. 1902-ஆம் ஆண்டு ஜூலை நான்காம் நாள் அவர் மகாசமாதி எய்தினுர். ●

---

(14ஆம் பக்கத் தொடர்ச்சி)

இவ்வாறு வணங்கியதனுல் அவனுடைய சடைமுடி செக்கச்செவேலென்று நிறம் பெற்று விளங்குகிறது. அந்தத் திருமுடியில் அவன் நிறைவுபெருத இளம்பிறையைச் சூடியிருக்கிறுன். அதன் நிலவொளியில் இந்தச் சிவப்புப் பளிச்சென்று பட்டு விளங்குகிறது. ஊடலைத் தீர்க்கும்பொருட்டு வணங்கித் தன் முடிக்குச் செவ்வண்ணக் கோலத்தை உண்டாக்கியிருக்கிறுன். வானத்தில் தோன்றும் செக்கர்வானத்தைக்காட்டிலும் இப்போது சிவப்பாக இருக்கிறது அந்த முடி. முன்பு எல்லாம் செஞ்சடை செக்கர்வானத்தை ஒத்து விளங்கும். இப்போது அதைவிட அதிகச் சிவப்பாகக் கோலம் காட்டுகிறது.

அந்தக் கோலத்தை வருணிக்கிறுர் அம்மையார்.

சிலம்படியாள் ஊடலைத் தான்தவிர்ப்பான் வேண்டிச்
சிலம்படிமேல் செவ்வரத்தம் சேர்த்தி—நலம்பெற்று
எதிராய செக்கரினும் இக்கோலம் செய்தான்
முதிரா மதியான் முடி.

[முதிராத இளம்பிறையை அணிந்த இறைவன் சிலம்பை அணிந்த திருவடியை உடைய அம்பிகையின் ஊடலைத் தானே போக்குவதற்கு விரும்பி, அப் பெருமாட்டியின் சிலம்படியின் மேல் உள்ள செம்பஞ்சுக் குழம்பைப் படச்செய்து, அழகு பெற்று, முன்பு ஒப்பாக உள்ள செவ்வானத்தை விடச் சிவப்பாக உள்ள இக் கோலத்தைத் திருமுடிக்குச் செய்தான்.

மதியான், வேண்டி, சேர்த்தி, முடி இக்கோலம் செய்தான் என்று கூட்டிப் பொருள் செய்க.

ஊடலால் பிரிந்து சென்றபோது சிலம்பின் ஒலி கேட்டதால், அதைக் கொண்டு சிலம்படியார் என்றுர். பின்பு இறைவன் பணியும் போதும் அச் சிலம்பு ஒலித்தமையால் மீண்டும் சிலம்படியாள் என்றுர். முதலிற் சிலம்பு ஒலித்தது ஊடலால். பின்பு சிலம்பு ஒலித்தது ஊடல் தீர்ந்தமையால். செவ்வரத்தம்—செம்பஞ்சுக் குழம்பை. நலம்—அழகு. எதிர் ஆய—இதற்கு முன் ஒப்பாக இருந்த. செக்கரினும்—செவ்வானத்தைவிட. இக் கோலம் என்ற சுட்டு நெஞ்சறி சுட்டு; அம்மையார் தம் உள்ளத்தில் கற்பனை செய்து கண்ட கோலம் அது. முதிராமதி—பிறை].

இது அற்புதத் திருவந்தாதியில் 68-ஆவது பாடல். ★

# அருள்நெறிக் கதை

## தவப் பயன்

நரேந்திரன்

உபமன்யு என்ற சிறுவன் வீட்டிற்குள் ஓடி வந்து தன் அன்னையின் மடியில் உட்கார்ந்தான். அவன் தன் தாயைப் பார்த்து, ''அம்மா! எனக்கும் அவ்வளவு பால் வேண்டும். அதே போல் இனிப்பாக இருக்க வேண்டும்!'' என்று கெஞ்சினான். உபமன்யு சற்று நேரத்திற்கு முன்பு தன்னுடைய மாமாவின் வீட்டிற்குச் சென்றிருந் தான். அங்கு அவனுடைய மாமாவின் மகன் பால் குடித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தான். அதோடு அவனுக்கும் அங்கு ஒரு வாய் பால் கிடைத்தது. உடனே வீட்டிற்கு ஓடிவந்து தன் தாயிடம் பால் வேண்டும் என்று கேட்டான்.

உபமன்யு பால் கேட்டவுடனே அவனது தாயின் உள்ளம் தாங்கொணாத வேதனைப்பட்டது. அதற்குக் காரணம் அந்த வீட்டில் நிலவிய வறுமைதான். வீட்டில் சாப்பிடக்கூடப் போதுமான உணவுப் பண்டங்கள் இல்லை. அப்படி இருக்கும்போது அவள் பாலுக்கு எங்கே போவாள்? உபமன்யுவை எடுத்து மடிமீது அமர்த்திக் கொண்டு தன் வேதனையை மறைத்தபடி அவள், ''குழந்தாய்! நாமோ ஏழைகள். நமக்கு அன்றாடம் பசி நீங்கு மளவிற்கு உணவு கிடைப்பதே அரிதாக இருக் கிறதே! இந்த நிலையில் நான் பாலுக்கு எங்கே போவேன்? நீ இதுபோல் பிடிவாதம் பிடிக்கக் கூடாது'' என்று சொல்லிச் சமாதானப்படுத்தினாள். ஆனால், அடம் பிடிக்கும் குழந்தைகளைச் சமா தானப்படுத்துவது அவ்வளவு எளிதல்லவே! உபமன்யு தன் பிடிவாதத்தைச் சிறிதும் தளர்த்தா மல் பால் வேண்டுமென்று அழத் தொடங்கினான்.

இதைக் கண்ட தாயின் மனநிலையை எப்படி வர்ணிக்க முடியும்? அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. அன்றைய பகல்பொழுதிற்காகச் சிறிது சாதம் வாங்கி அவள் ஒரு பாத்திரத்தில் மூடி வைத்திருந்தாள். உடனே அந்தச் சாதத்தில் நீரை ஊற்றி நன்றாகப் பிசைந்து அதை ஒரு டம்ள ரில் ஊற்றி அவள், ''குழந்தாய்! இந்தா பால், இதைக் குடி. நீ மிகவும் சமர்த்தல்லவா? அழக் கூடாது'' என்றாள்.

ஆவலுடன் கையை நீட்டி உபமன்யு டம்ளரை வாங்கிக்கொண்டான். உதட்டில் அதை வைத்த வுடனே அது பால் அல்ல என்பது அவனுக்குப் புரிந்துவிட்டது. டம்ளரைத் தாயிடமே திருப்பிக் கொடுத்துவிட்டு, ''அம்மா! இது அசல் பால் அல்ல; போலிப் பால்! அசல் பால் மிகவும் இனிமையாக இருக்கும். இது எனக்கு வேண்டவே வேண்டாம்!'' என்று சொல்லிக்கொண்டே மறுபடியும் அழ ஆரம் பித்தான்.

உபமன்யுவின் தாய் மகனின் நிலை கண்டு மிகவும் கலங்கினாள். பிறகு அவனைப் பார்த்து, ''குழந்தாய்! இந்த உலகில் முத்து, வைரம், மாணிக்கம் போன்ற விலையுயர்ந்த பொருள்கள் அநேகம் இருக்கின்றன. ஆனால் அவை நமக்கு நல்ல அதிர்ஷ்டம் இருந்தால் தான் கிடைக்கும். நாமோ அபாக்கியசாலிகள். நம்மைத் துரதிர்ஷ்டம் பிடித்து ஆட்டுகிறது. எனவே நமக்கு நல்ல பால்கூடக் கிடைக்காது! சிவபெருமான்தான் சர்வ வல்லமை படைத்தவர். அவரைத் திருப்திப்படுத்தினால் பாற்கடலேகூட நம் அருகில் ஓடக்கூடும். சிவபெருமான் மகிழ்ந் தால் பக்தர்கள் எதைக் கேட்டாலும் அவர் தரத் தயங்கமாட்டார். அவரைச் சரணடைந்தால் நமது எல்லா விருப்பங்களும் நிறைவேறிவிடும். சிறந்த தவத்தினால்தான் அவரைத் திருப்திப்படுத்த முடியும்'' என்று உபதேசம் செய்தாள்.

தாய் சொன்னதை உபமன்யு மிகுந்த ஆர்வத் தோடு கேட்டான். அவனுடைய கண்ணிலிருந்து நீர் கூடச் சொட்ட மறந்துவிட்டது. தாய் கூறிய கருத்தை அவன் உணர்ந்துகொண்டான்.

அவனுடைய கண்களில் அசாதாரணமான ஒளி தென்பட்டது, மனதில் உறுதி உண்டாயிற்று. தாயின் திருவடிகளில் விழுந்து வணங்கினுன். ''அம்மா! நான் கண்டிப்பாகத் தவம் செய்யப் போகிறேன்! என் கடுமையான தவத்தால் சிவபெருமானின் இருப்பிடமாகிய கைலாசத்தையே ஆட்டி வைக்கப்போகிறேன். அவர் கண்டிப்பாக மகிழ்ந்து அந்தப் பாற்கடலையே எனக்காகக் கொடுக்கப் போகிருர்'' என்று சொல்லிவிட்டு, ஒரு விநாடியும் தாமதிக்காமல் உபமன்யு வீட்டைவிட்டு வெளியேறினுன்.

உபமன்யு இமயமலையின்மேல் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்துத் தவம் செய்ய அமர்ந்துவிட்டான். சிவபெருமானை மகிழ்விப்பதற்காக உணவு தண்ணீர் உறக்கம் அனைத்தையும் துறந்து விட்டான். அவனுடைய கடுமையான தவத்தால் அகில உலகமும் நடுங்கத் தொடங்கியது. பகவான் விஷ்ணு, மற்றத் தேவர்களுடன் மந்தராசல மலைக்கு வந்து சிவபெருமானைக்கண்டு வணங்கி, ''பிரபோ! சிறுவனின் தவத்தைக் கலைத்து அகில உலகத்தையும் காப்பாற்றுங்கள்'' என்று வேண்டினுர்.

உபமன்யுவின் எதிரே ஐராவதம் வந்து நின்றது. அதிலிருந்து தேவேந்திரன் இறங்கினுன். உபமன்யுவின் அருகே சென்று அவன் தவத்தைக் கலைத்துத் தேவேந்திரன், ''குழந்தாய்! நான்தான் தேவேந்திரன். உன் தவத்தால் மிகவும் மகிழ்ந்தேன். குழந்தாய்! உன்னைப் போன்ற பச்சிளம் பாலகர்களுக்கு இவ்வளவு கடுமையான தவம் எதற்கு?'' என்று கேட்டான்.

உபமன்யு தேவேந்திரனைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தான். ''சுவாமி! தங்களின் வருகையால் எனது இந்தக் குடிசை மிகவும் புனிதமடைந்து விட்டது. எனக்கு எப்போதும் சிவபெருமானின் திருவடிகளில் நிலையான பக்தி இருக்கும்படி அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டினுன். தன்னுல் இயன்ற அளவுக்கு இந்திரனுக்கு விருந்துபசாரம் செய்தான்.

இந்திரன் சிறுவனை அருகே அழைத்து, ''குழந்தாய்! சிவபெருமானை அடைவது மிகவும் கடினமான காரியம். ஆனுல் நானே மூவுலகிற்கும் அதிகாரி. எனவே நீ என்னை வணங்கினுல் உனக்கு எல்லாவிதமான செல்வத்தையும் வழங்குவேன்!'' என்று கூறிச் சிறுவனைச் சோதித்துப் பார்த்தான்.

உபமன்யுவுக்கு வந்ததே கோபம். அவன் உடனே தேவேந்திரனிடம், ''நீ இந்திரனுக இருந்தால் இவ்விதம் சிவநிந்தனை செய்ய மாட்டாய். எனவே நீ தேவேந்திரன் வடிவத்தில் வந்திருக்கும் அரக்கனுகத்தான் இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். நீ என் தவத்தைக் கலைக்கவே வந்திருக்கிருய். மேலும் நீ சிவபெருமானையே நிந்திக்கிருய்! என் இஷ்ட தெய்வத்தை நிந்திக்கும் உன்னைக் கொன்ருல்தான் என்ன!'' என்று சொல்லிக் கொண்டே தேவேந்திரனைக் கொல்வதற்காக அருகில் வந்த உபமன்யு டக்கென்று நின்று விட்டான்!

காரணம், இந்திரன் வடிவத்தில் வந்திருந்த சிவபெருமான் அவனுக்குக் காட்சி கொடுத்தது தான். சிவபெருமான் உபமன்யுவிடம், ''குழந்தாய்! உன் கடுமையான தவத்தின் பயனுக என்மீது இடையருத பக்தியை நீ பெற்றுவிட்டாய். நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று கூறி, உபமன்யுவைத் தழுவிக்கொண்டார். உபமன்யு சிவபெருமானின் திருவடிகளில் அப்படியே நெடுஞ்சாண்கிடையாக விழுந்துவிட்டான்.

''நான் உன்னைச் சோதிப்பதற்காகவே அவ்விதம் செய்தேன்'' என்று சொல்லிவிட்டுச் சிவபெருமான் உபமன்யுவின் விருப்பப்படியே பாற்கடலைப் பாயும்படி அருள்புரிந்தார். உபமன்யுவைத் தூக்கி அவர் உமாதேவியின் மடிமீது அமர்த்தி, ''ஜகஜ்ஜனனியாகிய அம்பாள்தான் உன் தாயார், நான்தான் உனக்குத் தந்தை'' என்று கூறியருளினுர்.

பகவதியான பார்வதிதேவி குழந்தை உபமன்யுவிற்குப் பலவகையான செல்வங்களையும் யோகங்களையும் பிரம்மவித்தையையும் அருளினுள். உபமன்யு தன் நிலை மறந்தான். பரவசம் பொங்க, நடுங்கும் குரலுடன், அகில உலகையும் காக்கும் உமாதேவியையும் சங்கர பகவானையும் துதிக்கத் தொடங்கினுன். பக்தன் கண்ணை மூடிக்கொண்டு பரவச நிலையில் இருந்த சமயத்திலேயே சங்கரர் கிரிஜாதேவியுடன் அங்கிருந்து மறைந்து உபமன்யுவின் உள்ளத்தில் நிலையாகக் குடிபுகுந்தார்.

லிங்க புராணத்திலுள்ள இந்தக் கதை தவத்தின் மகிமையை நன்கு புலப்படுத்துகிறது. *

# ஸ்ரீராமபிரானின் அருளுரைகள்

## லட்சுமணனுக்கு வழங்கிய அறிவுரை

1. ஹே லட்சுமணா! நான் சொல்வதைக் கேள். இந்த ஜீவனை எப்படி நீ அறிந்துகொள்ளலாம் என்று நான் உனக்குச் சொல்லுகிறேன். ஒரே ஒரு பொருளைத்தான் பரமாத்மா என்றும் ஜீவாத்மா என்றும் இரண்டு பெயர்களால் குறிப்பிடுகிறோம். இந்த இரண்டுக்கும் பேதமே இல்லை.

2. பரமாத்மாவும் ஜீவாத்மாவும் வெவ்வேறானவை என்று அஞ்ஞானிகள்தாம் நினைக்கிறார்கள். கர்வம், அகங்காரம், கொடுமை, கோணல்புத்தி ஆகியவற்றை நீ உதறி எறிய வேண்டும். பிறருடைய குற்றச்சாட்டுக்கு நீ ஒருபோதும் செவி சாய்க்கக் கூடாது.

3. அதோடு, நீயும் பிறரிடம் குற்றம் காணக் கூடாது. மனம், வாக்கு, காயம் இவற்றை அடக்கத்தில் வைத்திரு. ஒருபோதும் மனம் கலங்காதே. உடலையும் உள்ளத்தையும் தூய்மையாக்கிக் கொண்டு பக்திசிரத்தையுடன் ஒவ்வொரு நாளும் உன் குருவுக்குச் சேவை செய்து வா. நல்ல காரியங்கள் செய்வதில் ஒரே ஒரு நாள்கூட அசிரத்தையாக இருந்துவிடாதே.

4. சத்தியத்தைக் கைவிடாதே. எப்போதும் உற்சாகத்துடன் இரு. புலனின்பங்களை அனுபவிக்கும் எண்ணம் எழுந்தவுடனே அதை அடக்கிவிட வேண்டும். பிறவியும் மூப்பும் மரணமும் உனக்கு இயல்பானவையே என்பதை நினைத்து எப்போதும் நீ பணிவுடன் நடந்துகொள்ள வேண்டும். மனைவி மக்களிடம் அளவுக்கு மீறிய பற்றும் பாசமும் கொண்டுவிடாதே.

5. கூடிய வரையில் மக்கள் கூட்டங்களில் கலந்து கொள்வதைத் தவிர்த்துவிடு. பரிசுத்தம் வாய்ந்த ஏகாந்தமான ஓர் இடத்தில் வாழ்ந்து வா. குறுக்குப் புத்தி கொண்ட மக்களுடன் தொடர்பு கொள்ளாதே. முற்றிலும் தனிமையில் வாழ்ந்து வருவதற்கே முயற்சி செய். வேத வேதாந்தங்களை ஆராய்ச்சி செய்தும், வேத வேதாந்தங்களின் பாஷ்யங்களைப் படித்தும், வேத கர்மங்களைச் செய்தும் பரமாத்மஞானம் அடைவதற்கு ஆவலுடன் இரு.

6. அதிருஷ்டம் வந்து சேர்ந்தால் பிரமாதமாக மகிழ்ந்து போகாதே. அதிருஷ்டம் போய்விட்டால் மனவருத்தமும் கொள்ளாதே. மனதைச் சம நிலையில் வைத்திரு. ராமனாகிய நான் எல்லா உயிர்களுக்கும் பிராணனாக விளங்குகிறேன். என்னிடமே உன் மனம் நிலைத்து இருக்கட்டும்.

7. இவ்விதம் என்னிடம் உன் மனம் நிலைத்திருப்பதனால், நீயே சிதாத்மா என்ற சாட்சாத்காரம் உனக்குக் கிடைக்கும். சிதாத்மாவோ எப்போதும் பரிசுத்தமாக இருப்பது. அது புலன்களிலிருந்தும் வேறுபட்டது; குணங்களிலிருந்தும் வேறுபட்டது; வடிவங்களிலிருந்தும் வேறுபட்டது. இந்தச் சாட்சாத்காரத்தைப் பெற்றவுடனே நீ பரஞானம் பெற்றவனாவாய். ஒரு பெரிய உண்மையை நீயே உன் வாழ்க்கையில் அனுபவிப்பது சாத்தியமாகும். ஆத்மா உடல் அல்ல, பிராணன் அல்ல, புத்தி அல்ல, அகங்காரமும் அல்ல என்பதுதான் அந்தப் பெரிய உண்மை.

8. ஆத்மா உணர்ச்சிகள் அற்றது; குண விசேஷங்கள் அற்றது. அது பரமானந்த சொரூபமாகவே விளங்குவது. அது ஆதியற்றது, அந்தமற்றது; எங்கும் வியாபித்திருப்பது; பகுக்கப்பட இயலாதது. ஏகமானது, அத்துவிதியமானது, பரமானது, நிர்க்குணமானது, பிரபஞ்சம் முழுவதையும் நிறைத்திருப்பது, வடிவம் அற்றது. அதுவே பரம சத்தியமாகத் திகழ்ந்துகொண்டிருக்கிறது. புத்தியாலோ அறிவினாலோ அளந்து பார்க்க முடியாதது. மாயையால் தொடவும் முடியாதது அது.

9. இது எல்லாம் பிரத்தியட்ச அனுபவமாக ஆகவேண்டுமானால் நீ சற்குரு ஒருவரைத் தேடி, அவருடைய உதவியைப் பெற வேண்டும். அவர் சாஸ்திரங்களின் ஆதாரத்தைக் கொண்டு, இதை விளங்க வைப்பார். நீயும் மற்ற ஜீவர்கள் அனைவரும் பரமாத்மாவைத் தவிர வேறு வஸ்து அல்ல என்பதை நீ அனுபவத்தில் உணரும்போது

நீ முக்தி பெறுவாய். ஞானம், விஞ்ஞானம், வைராக்கியம் ஆகியவை இன்றி முக்தி பெறுவது சாத்தியமில்லை. முக்தியடைந்த ஒருவனை இந்த உலகில் காண்பது மிகவும் அரிது.

10. முக்திநிலையைப் பெறுவதற்கு என்னிடம் பக்தி கொள்ளுவது மிகவும் அவசியம். கண்கள் இருந்தாலும் இருளில் நடந்து போவதற்கு நமக்கு



ஒரு விளக்குத் தேவைப்படுகிறது அல்லவா? அதே போல உனக்குப் போதிய ஞானம் இருந்தாலும் சரியான வழியைப் புரிந்துகொள்ளுவதற்கு ராம பக்தி வேண்டும்.

11. ராமபக்தியைப் பெற்ருல் போதும். வேறு எதுவுமே வேண்டியதில்லை. என் பக்தனுக்கு ஞானமும் விஞ்ஞானமும் வைராக்கியமும் தாமாகவே வந்து சேரும். இது ரிஷிகளின் வாக்கு ஆகும். இவ்விதம், உன் பிரார்த்தனைக்கிணங்க நான் முக்தி மார்க்கத்தை உனக்குப் போதித்திருக்கிறேன். இந்தப் போதனையைச் சரியானபடி கிரகித்து, அதைப் பின்பற்றி நடப்பவன் யாராக இருந்தாலும் அவன் முக்தி பெறுவது நிச்சயம்.

12. நீ எனது அன்புக்கு உரியவன். ஆகவே இதையெல்லாம் நான் உனக்கு உபதேசித்தேன். இந்த உபதேசத்தைச் சிந்தித்தும் அதைப் பின்பற்றி வாழ்ந்தும் வருபவன் உண்மையில் ஞானியே ஆவான். அவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுவான். தம்பி! இந்த உலகம் முழுவதையும் என்னுல் வியாபிக்கப்பட்டிருப்பதாக நீ பார்க்க வேண்டும்; ஆழ்ந்த நம்பிக்கையுடன் நீ எனக்குப் பணியாற்ற வேண்டும். இவ்விதம் செய்தால் நீ பரிசுத்தமடைவாய், மகிழ்ச்சி அடைவாய், ஆனந்தம் அனுபவிப்பாய், நன்மை பெறுவாய்.

13. என்னைச் சகுணமாகவும் நிர்க்குணமாகவும் ஒரே ஒரு தடவையாவது மனதில் நினைத்து வணங்குபவன் என்னுடைய புனிதமான பாததூளியினுல் புனிதமடைவான். சூரிய கிரணங்கள் மூன்று உலகங்களையும் பரிசுத்தமாக்குவது போல, என் பாத தூளி அவனைத் தூய்மைப்படுத்தும்; இந்த என்னுடைய போதனையைச் சாதாரணமானது என்று நினைக்காதே. சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கும் எல்லா உபதேசங்களின் சாரமேயாகும் இது.

14. வேதாந்த ஆராய்ச்சி செய்வதனுல் மட்டுமே பெறக்கூடிய ஞானத்தையே நான் உனக்கு உபதேசித்திருக்கிறேன். என்னிடமும் என் உபதேசத்திடமும் மிகுந்த பக்தியுடன் இதை எவன் படிக்கிருனே அவன் நிச்சயமாக என்னுடன் இணைந்து முக்தி பெறுவான். ☆

## வீரசேனன் வழிபட்டது

வீரசேனன் என்பவன் பாண்டியநாட்டு மன்னன். அவன் ஒரு நாள் காட்டிற்கு வேட்டையாடச் சென்ருன்.

வீரசேனன் செலுத்திய அம்பு, குறிதவறி, மறைந்திருந்த மறையவன் மேல் பாய்ந்தது. மறையவன் அங்கேயே இறந்தான். அது தெரிந்து, வீரசேனன் மிகவும் வருந்திஞன். பிரம்மஹத்தி உடனே கரிய உருவத்தில் வந்து அவனைப் பற்றியது; பலவாறு அவனைத் துன்புறுத்தியது. அந்தத் துன்பம் நீங்கப் புண்ணிய நதிகளில் ஆட எண்ணிச் சோழநாட்டைச் சேர்ந்தான். திருவிடைமருதூரை அடைந்தான். பூசத்துறையில் ஆடிஞன். கோயிலை அடைந்தான். கோயில் கொண்டிருக்கும் மருதவாணரை வழிபட உள்ளே சென்ருன், பிரம்மஹத்தியைக் கணதிபர்கள் உள்ளே செல்ல விடாமல் தடை செய்தார்கள். பழியும் தயங்கி வெளியே நின்றது. நீண்ட நாள் இறைவனை வழிபட்டு, முடிவில் வீரசேனன் முக்தியும் பெற்ருன்.

—திருவிடைமருதூர்த் தல வரலாறு



# ஈசாவாஸ்யோபநிஷத் மந்திரம்—2

சுவாமி அமரானந்தர்

“இந்த உலகில் விதித்த கர்மங்களைச் செய்வதன் மூலம் நூறாண்டு (நீண்ட) காலம் வாழ்ந்திருக்க விரும்ப வேண்டும். மனிதனாகிய உனக்கு இதுவே வழி. கர்மம் உன்னைக் களங்கப்படுத்தாதிருப்பதற்கு இதைவிட வேறு வழியில்லை” என்று ஈசாவாஸ்ய உபநிஷதத்தின் இரண்டாவது மந்திரம்* கூறுகிறது.

முதல் மந்திரத்தில், “செல்வம் அனைத்தும் ஈசனுடையது. ஆகையால் பிறர் பொருளை விரும்பாதே. உனக்கென்று மிகைபடப் பொருள் வைத்திருக்காதே” என்று சொல்லப்பட்டது. ‘பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை’ என்பது கோட்பாடு. அப்படியானால், ‘மனிதன் எப்படி வாழ வேண்டும்?’ என்ற கேள்வி எழுகிறது. அதற்கு விடை வருகிறது:—“கர்மம் செய். ஆனால் கர்ம பலனில் பற்று வைக்காதே” என்பது கண்ணன் காண்டீபனுக்குப் புகட்டிய கீதா உபதேசம்.

தனக்கு ஏற்பட்ட கருமத்தைப் பொறுப்புடன் முறையாகச் செய்துகொண்டு ஒருவன் நூறாண்டு இந்த நிலவுலகில் வாழ்ந்திருக்கலாம். ஏராளமான செல்வத்தைப் படைத்திருக்கலாம். சுகபோகங்களுக்கு உரிய பொருள்களையும் வைத்திருக்கலாம். ஆனால் அவை யாவும் ஈசனுடைய உடைமை என்று எண்ண வேண்டும். எனவே அவற்றில் பற்று வைத்துவிடக் கூடாது என்பதே இந்த மந்திரத்தின் கருத்து.

இனி, கர்மபலனை எதிர்பார்க்காமல் யாரும் கர்மம் செய்யமாட்டார்கள். கர்மத்தின் பலன் தனக்கு அனுபவத்துக்கு இல்லையெனில் ஒருவனும் கருமம் செய்யமாட்டான். எல்லோரும் சோம்பலுற்றுப் போய்விடுவார்கள். இது முரண்படுவதாகத் தெரிகிறது. கருமத்துக்குத் தன்னைக் கர்த்தாவாக்கிக் கொள்ளாமல், பற்று இன்றிக் கருமம் செய்து, அதனால் வரும் பலனையும் பற்றின்றி அதாவது சாசுவதம் என்று எண்ணாமல் அனுபவிக்கலாம். சில சான்றுகள் மூலம் விளக்கிக் கொள்ளலாம்.

சர்க்கார் கஜானா ஒன்றின் பொக்கிஷதார் ஒருவருக்கு ஒரு லக்ஷம் ரூபாய் ஆஸ்தி இருப்பதாக வைத்துக்கொள்வோம். பல பக்கங்களில் பரவியிருந்த அந்தச் செல்வத்தைத் திரட்டி, மறுநாள் பூஸ்திதி ஒன்றில் குவிக்கும்பொருட்டு முதல் நாள் இரவில் தம் வீட்டில் பாதுகாத்து வைக்கிறார். அன்றிரவு அது களவு போய்விடுகிறது. காலையில் அவருடைய மனநிலை எப்படி இருக்கும் என்று எண்ணிப் பார்க்க முடியுமா? தம் வாழ்வெல்லாம் அழிந்து போனதாக எண்ணுவார். ஆனால் அந்த நிதிக்காப்பாளர் கருவூலத்தில் இருந்த ஒரு லக்ஷம் ரூபாயை முதல்நாள் மாலை எண்ணிக் கணக்கெடுத்துக் கஜானாவில் வைத்துப் பொறுப்புடன் நன்கு பூட்டிச் சீல்வைத்துச் சரிபார்த்து வீட்டுக்குப் போய் விடுகிறார். இரவு அந்தச் செல்வம் களவுபோனால் காலையில் அதைக் கண்ணுற்ற அவர் முறையாகக் காவல்துறைக்குத் தெரிவித்து அமைதியாக நடவடிக்கை எடுக்கிறார். இங்கு அவருக்குத் துயரம் இல்லை.

ஒருவன் தனக்கு எதைச் சொந்தம் ஆக்கிக் கொள்ளுகிறானோ அது நழுவும்பொழுது அவனுக்குத் துக்கம் உண்டாகிறது. தன் செல்வத்தில் பற்றுதல் இருக்கிறது. பற்றுதல் துன்பத்துக்கு ஏதுவாகிறது. சர்க்கார்ச் செல்வத்தில் பற்றுதல் இல்லை. ஆனால் கடமையாக அதைப் பொறுப்புடன் பாதுகாக்கிறான். அது நழுவும்போது துயரம் ஏற்படுவதில்லை. அவ்விதம் தன் செல்வத்தையும் பற்றின்றிப் பாதுகாத்துப் பலன் அனுபவிப்பதில் பழுது ஏதுமில்லை. ‘ந கர்ம லிப்யதே’ அதாவது கர்மம் களங்கப்படுத்துவதில்லை.

ஜனநாயக ஆட்சியில் மாநில மந்திரி ஒருவருக்கு அந்த மாநிலத்திலுள்ள எல்லா நிலங்களின்பேரிலும் அதிகாரம் இருக்கிறது. அவர் உத்தரவு போட்டு ஒருவருடைய பூமியை எடுத்துக் கொள்ளலாம். புறம்போக்கு முதலான நிலங்களை மற்றவர்களுக்கு விநியோகிக்கலாம். ஆனால் தம் ஆட்சிக்காலம்

*குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேச் சதம் ஸமா: |
ஏவம் த்வயி நாந்யதேதோஸ்தி ந கர்ம லிப்யதே நரே ||

முடிந்தவுடன், அமைதியாக அந்த ஆட்சியை விட்டு விலகுகிறார். ஏனெனில், அவற்றில் அவருக்குப் பற்றுதல் அதாவது பந்தம் ஏதும் இல்லை. 'செல்வம் எல்லாம் அரசாங்கத்தினுடையது' என்று எண்ணி நிர்வகிக்கும்போது அது பந்தப்படுத்துவதில்லை. அவ்விதம் அனைத்தும் அரசுடைமை என்று எண்ணும்போது அவற்றில் பற்றுதல் உண்டாவதில்லை.

பக்த கபீர்தாசர் அதிதிகளை உபசரிப்பதற்காகத் தம் இல்லத்தில் பொருள் இல்லாமையால் தம்முடைய மைந்தன் கமாலுடன் பொருள் படைத்த ஒரு வீட்டினுள் கன்னம் வைத்துப் போதுமான பொருள் மாத்திரம் எடுத்துக் கொண்டு திரும்புகிறார். அப்போது கமாலின் தலை மாத்திரம் கன்னம் வைத்த துவாரத்தின் வழியே வெளிவந்து, மற்ற உடல் பாகம் அந்தத் துவாரத்தில் மாட்டிக்கொண்டது. வீட்டுக்காரர்கள் எழுந்துவிடவே, 'அடையாளம் தெரிந்தால் மறுநாள் அதிதி சத்காரம் தடைப்படும்' என்று எண்ணி, உருத் தெரியாதிருக்கும்பொருட்டு, கமால் தன் தலையைத் துண்டித்து எடுத்துச் செல்லும்படி தந்தையிடம் கூறுகிறான். தந்தையும், 'ஈசன் தந்த செல்வம் அவனுடைய்ய இச்சைப்படி நடக்கிறது' என்று எண்ணித் தயங்காமல் தனயனின் தலையைத் துண்டித்து எடுத்துச் சென்றுவிடுகிறார். இறைவன் அருளால் இறுதியில் கமால் உயிர்பெற்று எழுகிறான்.

இவ்விதம் செல்வம் அனைத்தும் அரசாங்கத்தினுடையது அல்லது ஈசனுடையது என்று எண்ணி நிர்வகிக்கும்போது சாந்தி உண்டாகிறது. அக்காலத்தில் பிரம்மஞானியான ஜனகன் பற்றின்றித் தன் ஆட்சியை நடத்தியது இதற்குப் போதிய சான்றாகும். இக்காலத்திலும் சில தொழிலதிபர்கள் தொழிலாளர்களுக்குத் தகுந்த ஊதியம் கொடுத்து அவர்களுடன் நட்புறவோடு இருந்து தொழிலைத் திறம்பட நிர்வகிப்பவர்களாக இருக்கிறார்கள். கர்மத்துக்குத் தன்னைக் கர்த்தாவாக்கிக் கொள்ளாமல் பற்றின்றிக் கருமம் செய்து அதனால் வரும் பலனை அனுபவிக்கும்போது அந்தக் கருமம் அவனை மலினப்படுத்துவதில்லை என்பதே இந்த மந்திரத்தின் கருத்து

ஒப்புள்ள, ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேச மொழி:— ''நீ எந்தக் கருமத்தை வேண்டுமானாலும் ஆத்ம சாதனமாகச் செய்யலாம் அந்தக் கர்ம பலனில் நீ சிறிதும் பற்று வைக்காமல் அதை ஈசனுக்கு ஒப்படைத்துவிடுவாயானால் அது நல்ல ஆத்மசாதனமாகிறது.''

## மகான் நாகமகாசயர்

### நாடோடி

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் பக்தர்களில் ஒருவரான நாகமகாசயர், ஒரு தடவை கல்கத்தாவில் பிளேக் கண்டபோது, தமக்கு வியாதி பற்றிவிடுமோ என்ற கவலை கூட இல்லாமல் வியாதியுற்றவர்களுக்குத் தொண்டு செய்தார்.

ஒரு சமயம் பிளேக்கினால் அவதியுற்ற ஓர் ஏழையின் வீட்டிற்கு அவர் சென்றிருந்தார். சாகக் கிடந்த அவன், தான் கங்கைக்கரையில் சாக வேண்டுமென்று தன் விருப்பத்தைத் தெரிவித்தான்.

உடனே நாகமகாசயர் அவனைத் தம் தோளில தூக்கிக்கொண்டு, கங்கைக் கரைக்குச் சென்றார். அங்கு அவன் உயிர் பிரியும்வரை அவனைத் தம் மடியிலேயே வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்.

பிறகு அவன் உயிர் பிரிய, அவனுடைய தகனக் காரியங்களைத் தாமே கவனித்தார்.

பிளேக்கினால் அவதியுற்றவன் மறைந்துவிட்டான். அவன் பெயரும் மறைந்துவிட்டது. ஆனால் நாகமகாசயரின் வாழ்க்கையில் நடைபெற்ற இவை போன்ற பல சம்பவங்கள் இன்றும் நம் நெஞ்சத்தில் ஒளி விட்டுப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன.

நாகமகாசயரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் ஒரு தமிழ்ப் புத்தகத்தை, சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடம் வெளியிட்டுள்ளது.

# தமிழ்ப் பொங்கல்

**டாக்டர் ந. சஞ்சீவி**

1

தமிழ்ப் பொங்கல் தமிழ் மக்களுக்குத் தனிச் சிறப்பு. ஆனால் பொங்கல் விழா பற்றிய குறிப்பு ஏதும் பழந்தமிழ் நூல்களில் இருப்பதாகத் தெரியவில்லை. ஆம், பொங்கல் என்ற சொல்லும் உணவு வகையும் பழமையானவை. ஆனால் பொங்கல் என்ற விழாவகை புதியது.

'சங்கராந்தி'யாக இந்த நாள்-இந்த விழா இடைக்காலத்தில் கொண்டாடப்பட்டு வந்திருத்தல் கூடும். இல்லையேல் 'பொங்கல் இனும்', 'பொங்கல் காசு', 'பொங்கல் பணம்', 'பொங்கல் வரிசை' போன்ற சொற்களும், 'பொங்கலும் போச்சு, போகியும் போச்சு, பெண்ணை அனுப்படா பேயாண்டி.' போன்ற பழமொழிகளும் ஏற்பட்டிரா. ஆனால், இந்தச் சொற்கள்—பழமொழிகள் போலவே பொங்கல் விழாக் குறிப்புடைய நாட்டுப்புறப் பாடல்களும் குறைவாகவே இன்று காணப்படுகின்றன. இதிலிருந்து, அறுவடை விழாவாகப் பழந்தமிழரிடம் இருந்திருக்கக் கூடிய ஒன்று, சமயச் சார்பு மிகுந்த காலத்தில் சங்கராந்தியோடு சார்ந்தது —'சமாதி' நிலை பெற்றது!—எனலாம்.

2

சற்று முன் சொன்னது போலப் 'பொங்கல்' என்ற சொல் பழமையானது. 'பொங்கல்' தொல்காப்பியத்தில் இல்லையாயினும், 'பொங்குதல்' (3 : 419 : 2) உண்டு. 'பொங்கல்' என்ற உணவு வகையையே முதல்முதல் தமிழர் கண்டிருப்பாராயினும் அது இலக்கியத்தில் தனிச் சிறப்புடன் இடம் பெறுதல் தமிழர்தம் தலைக்காப்பியமாய்த் திகழும் சிலப்பதிகாரத்தில்தான் (1 : 5 : 69).

'பொங்கு' என்ற வினை 'அல்' விகுதி பெற்றுப் 'பொங்கல்' ஆகியுள்ளது. இந்த வினை/பெயர் அடியாகத் தோன்றியுள்ள தமிழ்ச் சொற்கள் அகர வரிசையில் வருமாறு:—

1. பொங்கடி, 2. பொங்கத்தம், 3. பொங்கத்தம் பொங்கு, 4. 'பொங்கத்தம் பொங்கோ', 5. பொங்கம், 6. பொங்கர், 7. பொங்கல், 8. பொங்கல் **இனும்**, 9. பொங்கல் காசு, 10. பொங்கல் சம்பா, 11. பொங்கல் சாதம், 12. **பொங்கல் சோறு**, 13. பொங்கல் படி, 14. பொங்கல் பண்டிகை, 15. **பொங்கல் பணம்**, 16. பொங்கல் பருக்கை, 17. பொங்கல் பானை, 18. **பொங்கல் போடுதல்**, 19. பொங்கல் வரிசை, 20. **பொங்கல் விழா**, 21. பொங்கல் வைத்தல், 22. பொங்கலாடுதல், 23. பொங்கலாண்டி, 24. பொங்கலாள், 25. பொங்கவிடுதல், 26. 'பொங்கலோ பொங்கல்', 27. பொங்கழி, 28. பொங்கற்



காரன், 29. பொங்காரம், 30. பொங்கித் தெளித்தல், 31. பொங்கி வழிதல், 32. பொங்குதல், 33. பொங்கு, 34. பொங்கு காலம், 35. பொங்கு கிறவன், 36. பொங்குங்காலம், 37. பொங்குசனி, 38. பொங்குமுட்டி, 39. பொங்கோலம். [தடித்த எழுத்துச் சொற்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியில் இல்லாதவை.]

3

ஒரு சொல்லின் முழுப் பொருண்மையை உணர, அந்தச் சொல் முதல்நிலையில் வரும் சொற்கள்/ சொற்றொடர்கள் மட்டும் போதா. அந்தச் சொல்லை இடை, கடை நிலையில் பெற்றிருக்கும் சொற்களையும் பட்டியல் செய்து பார்த்தல் வேண்டும். 'திருக்குறள் சொல்லடைவு' செய்த சாமி. வேலாயுதனார் இவ் வகையில் செய்த முயற்சி முதல் முயற்சி. அந்தக் கன்னி முயற்சி கன்னித் தமிழ் போலவே இன்னும் கன்னியாய் இருக்கிறது. நிற்க. இந்தக் கட்டுரைக்கு இவ் வகையில் இன்றியமையாத

சொற்கள்—'பொங்கல்' ஈற்றுச் சொற்கள்—அகர வரிசையில் வருமாறு:—40. காண் பொங்கல், 41. காணும் பொங்கல், 42. சர்க்கரைப் பொங்கல், 43. தைப்பொங்கல், 44. பால்பொங்கல், 45. மாட்டுப் பொங்கல், 46. மிளகுப் பொங்கல், 47. வெண் பொங்கல். [தடித்த எழுத்துச் சொற்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியில் இடம் பெறாதவை.]

மேற்கண்ட சொற்களில் நடுநாயகமாக இலங்குவது 'பொங்கு' என்ற வினை/பெயர்ச்சொல்லும், 'பொங்கல்' என்ற பெயர்ச்சொல்லும். அவற்றின் பொருள்கள் முறையே வருமாறு:

அ

பொங்கு[1]தல் வினை: 1. காய்ந்து கொதித்தல், 2. கொந்தளித்தல், 3. மிகுதல், 4. பருத்தல், 5. மேற்கிளர்தல், 6. உற்சாகம் கொள்ளுதல், 7. கோபித்தல், 8. செருக்குறுதல், 9. நுரைத்தெழுதல், 10. விளங்குதல், 11. மயிர்ச்சிலிர்த்தல், 12. விங்குதல், 13. விரைதல், 14. துள்ளுதல், 15. கண்குடு கொள்ளுதல், 16. உயர்தல், 17. செழித்தல், 18. ஒலித்தல், 19. சமைத்தல்.

பொங்கு[2] பெயர்: 1. செல்வச் செழிப்பு, 2. அதிருஷ்டம்.

ஆ

பொங்கல்: 1. பொங்குகை, 2. பெருஞ்சினம், 3. மிளகு, சீரகம், உப்பு, நெய் முதலியன கலந்து சமைத்த சோறு, 4. சூரியன் மகர ராசியில் நுழையும் நாளான தைமாத முதல் நாளன்று கதிரவனைப் பொங்கல் படைத்து வழிபடும் திருவிழா, 5. உயர்ச்சி, 6. பெருமை, 7. மிகுதி, 8. பொலிவு, 9. கள்.

மேற்கண்ட சொற்பொருள்கள் (19 + 2 + 9 = 30) அனைத்தும் மிகுதல்/வீங்குதல்/உயர்தல்/பருத்தல் என்னும் வினையடியாகவே அமைந்துள்ளமை அறியலாம். இந்த நான்கையும் 'மிகுதல்' என்ற ஒரே சொல்/கருத்தில் அடக்கலாம். எனவே அறுவடை (harvest) விழாவாகக் கொண்டாடப்படும் பொங்கல் திருநாள் மிகுதியைக் (Affluence) காட்டும் அரும்பெருநாள் என்பது தெளிவாகும். மேற்கண்ட மிகுதல் அடியாகவே பிற பொருள்கள் வளர்ச்சி பெற்றிருத்தல் அடிப்படைச் சொல்லொன்று கால அடைவில் பொருள் ஏற்றம்/மாற்றம் பெறும் அழகையும் ஆற்றலையும் அருமை பெருமையையும் காட்டும். இந்தப் பொருள்களுள் உச்சமாக இலங்குவதே சமயச் சார்பான 'பொங்கல் பண்டிகை' என்னும் பொருள். புதுநிலை புகும் சூரியனுக்கு நன்றி வணக்கம் செலுத்த அவன் அருளால் கிடைத்த புத்தரிசியைப் பொங்கி உடன் விளைபொருள்களாகிய இஞ்சி, மஞ்சள், கரும்பு இவற்றையும் இணைத்து இளஞாயிற்றுக்கோ உச்சிக் கதிரவனுக்கோ படைப்பதாலேயே இந்த நாள் இந்தப் பெயர்பெற்றது. ஆம், விண்ணும் மண்ணும் விழைந்து மணக்கும் தை முதல் நாளே தமிழர் திருநாள். வானக்கதிருக்கு வையக்கதிர்—காலைக் கதிருக்குக் கழனிக்கதிர் வாயார—மனமார—நன்றி நவிலும்நன்னாளே பொங்கல் திருநாள். இயற்கையை இறைவனாக வழிபடும் இன்பத் திருநாளே பொங்கல் திருநாள். கடவுள் கதிரவனுக்கு முதல் நாளும், கடும் உழைப்புக் காளைக்கு மறுநாளும் வணக்கம் வைக்கும் நாள் பொங்கல் பெருநாள். நடுநிலை ஞாயிற்றுக்கு நன்றி நவின்று—பாடுபட்ட பகடுகளுக்கு மறுபகல் நன்றி பாராட்டி—அடுத்த நாளே அன்பர்கள் நண்பர்களைப் பார்த்து அளவளாவி மகிழும் நாட்டுத் திருநாளே—நட்புத் திருநாளே—காணும் பொங்கல். பட்ட பாட்டின் பயனைப் பலருடனும் பகுத்துண்ணும் பண்புத் திருநாளே தமிழ்த் திருநாள்—தமிழர் திருநாள்.

---

**வரப் பெற்றோம்:**

## ஸ்ரீ சங்கரக்ருபா—விஷேச மலர்

[வெளியிட்டோர்: ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்—602 006; விலை ரூ. 2]

சிருங்கேரி, பெங்களூர் ஆகிய இடங்களில் நடைபெற்ற ஸ்ரீ தக்ஷிணாம்னாய பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமகாசன்னிதானம் அவர்களின் வெள்ளி விழா நிகழ்ச்சிகளைச் சிறப்பு அம்சமாகக் கொண்டு மாதப் பத்திரிகையாகிய ஸ்ரீசங்கர க்ருபா இந்த விசேஷ மலரை வெளியிட்டுள்ளது.

சிருங்கேரி மடத்தின் ஸ்ரீ மகாசன்னிதானம் அவர்களைப் பற்றிய கட்டுரைகளுடன் பிரகலாத ஸ்துதி, ஸந்த்யோபாஸத்தின் சிறப்பு, பாட்டி பக்தி என்ற தலைப்புகளில் அமைந்த கட்டுரைகளும் இம்மலரில் இடம் பெற்றுள்ளன.

'ராமாய ராமபத்ராய ராமசந்த்ராய வேதஸே | ரகுநாதாய நாதாய ஸீதாயா: பதயே நம: ||'—என்ற சுலோகத்திற்கு விளக்கமாக அமைந்திருக்கும் கட்டுரையை 'பாட்டி பக்தி' என்ற தலைப்பில் கோமதி ராஜாங்கம் சுவையாக எழுதியுள்ளார்.

—சத்தியகாமன்

# ஆன்மிக உரையாடல்

## அக்டோபர் 16

ரங்கூனிலிருந்து பிரம்மச்சாரி கே எழுதியிருந்த கடிதத்தை சுவாமி துரியானந்தர் படித்துக் கொண்டிருந்தார். அங்கே வெள்ளத்தாலும் பஞ்சத்தாலும் பாதிக்கப்பட்ட மக்களுக்காகக் கஷ்ட நிவாரண கேந்திரங்கள் ஆரம்பிக்கப்பட்டு, ஒவ்வொரு மாதமும் சுமார் ஆயிரம் ரூபாய் இதற்காகச் செலவிடப் படுகிறதாம். தவிரவும் இரக்க சிந்தை கொண்ட ஒரு கனவான் உதவிய 400 மணங்கு அரிசி விநியோகிக்கப்பட்டதாம். தொண்டரொருவரின் சகாயத்தோடு கே முழுப் பணியையும் நிர்வகிக்க வேண்டியிருந்ததாம். நூறு சதுரமைல்களுக்கு மேற்பட்ட பகுதியில் உதவிப்பணி நடக்கிறது; 16 அல்லது 17 மைல் அப்பாலுள்ள மக்கள் கூட உதவி பெறுகின்றனர்.

சுவாமி துரியானந்தர் : எவரது அருளால் தாம் ஈதனைத்தும் செய்ய முடிகிறதோ, அவர் இங்கே ஸ்தூல உடலிலிருந்து இதைக் காண்பதற்கில்லையே என்று கே துக்கப்படுகிறார். சுவாமி பிரேமானந்தரையே இவர் குறிப்பிடுகிறார். அவர்தான் இவரை இவ்வித வாழ்க்கைக்குக் கவர்ந்து வந்தவர். ''அவர் இதை ஸ்தூல சரீரத்தில் இருந்து கொண்டு காணவில்லை'' என்று 'கே' எழுதியிருப்பது வெகு அழகு. அதாவது, அவர் பார்க்கத்தான் செய்கிறார் ஆனால் பருவுடலிலிருந்தல்ல. உனக்குக் கே'யின் பூர்விக வாழ்வு பற்றி ஏதேனும் தெரியுமா? அவர் சிறந்த உழைப்பாளி. இவ்வளவு பெரிய பணியைத் தனியாகவே நடத்திவருகிறார்.

சீடர் : அவர் மிகவும் கடுமையாக உழைக்கக் கூடியவர். பகவான் அருளால், எந்தப் பணி தொடங்கினாலும் பணத்திற்குக் குறைவே வருவதில்லை என்பதை கவனித்து வருகிறேன். நாம் போய்ச் சேகரிக்க வேண்டியிருக்கிறது, அவ்வளவே! இதைச் செய்யக்கூட, துரதிருஷ்டவசமாக யாரும் முன்வரவில்லை. நான் போன போதெல்லாம் பார்த்திருக்கிறேன்—தேவை பணமல்ல, பணியாளரே என்று.

சுவாமி துரியானந்தர் : ஆம். நூற்றைம்பதே ரூபாய்க் கையிருப்போடுதான் கன்கல் சேவாசிரமம் ஒரு வாடகை வீட்டில் ஆரம்பிக்கப்பட்டது. பிறகு நிரந்தர மனைக்கட்டு பெறப்பட்டது. ஒரு பணக்கார வியாபாரியின் வெகுமதிப்பைப் பெற்ற ஒரு சாதுவுக்குத் தெரிந்தவர்களாக அங்குள்ள தொண்டர்கள் இருந்தனர். ஒரு முறை வியாபாரி சாதுவைப் பார்க்கப் போனபோது, சாது அவரிடம் சேவாசிரமத்துக்கு உதவுவது பற்றிக் கொஞ்சம் கோடி காட்டினார். அதையொட்டி வியாபாரி ஒரு நாள் அங்கே சென்றார். சேவாசிரமம் அமைந்திருந்த குடிசைகளுக்குள் குரங்குகள் சென்று மருந்துகளை நாசம் செய்வதை அறிந்தார். இந்தத் தொந்தரவைத் தவிர்க்க ஒரு செங்கற் கட்டிடம் அவசியமாகிறது என்றறிந்தார். இதற்கு ஓர் 'எஸ்டிமேட்' தருமாறு சொல்லிவிட்டுத் திரும்பினார், ஆனால் இதற்குத் தாமதமாயிற்று அதனால் அவரே இன்னொரு நாள் வந்து, விரைவு படும்படி அவர்களிடம் சொன்னார். ''நான் குடும்பஸ்தன். இப்போது எனக்கு தர்மம் செய்கிற மனப்போக்கு இருக்கிறது. ஆனால் வீடு திரும்பியதும் என் மனம் மாறலாம். பிறகு நான் எதுவுமே தரச் சிரமமாகி விடும்'' என்றார். இவ்விதமாக, ரூ. 6000 செலவில் டிஸ்பென்ஸரிக் கட்டிடமும் தொண்டர்களுக்கான இருக்கையும் கட்டப்பட்டன.

நீதிபதியொருவர் பிரதிமாதம் ரூ. 15 மதிப்புள்ள உணவு வகையராக்கள் கன்கல் சேவாசிரமத்துக்கு அளித்து வந்தார். எவரோ ஆசிரமத்தைப்பற்றி அவரிடம் மாறாகப் பேசிவிட்டார்கள். அதனால் அவர் ஒருநாள் திடீர் பிரவேசமாக அங்கு வந்தார். அங்கே சாதுக்கள் நோயாளிகளுக்கு எவ்வளவு கருத்தோடும் அக்கறையோடும் சிகிச்சை தந்து பணிவிடை செய்கிறார்கள் என்பது அவர் மனதில் தீர்க்கமாகப் பதிந்தது. ஒரு நோயாளியின் மரணகரமான புண்ணையும் ஒரு சாது கழுவிச் சுத்தம் செய்வதை அவர் கண்டார். பிறகு அவர் தாம் அங்கு வந்த காரணத்தைச் சொல்லி, ''இன்று நான் கண்டதிலிருந்து நீங்களும் பாக்கியசாலிகள், என்

தானமும் பாக்கியம் படைத்து என்று உறுதியடைகிறேன்'' என்றார்.

அந்த சேவாசிரமம் ஓர் அழகான இடத்தில் அமைந்துள்ளது. அதற்கு எதிர்ப்புறத்தில் கால்வாயின் மறுகரையில், ரிஷிகேசம் உள்ளது.* இங்கே இந்த வாரணஸியில் 'கே'யும் மற்றவர்களும் ஒரே ஒரு நாலணாத் துட்டோடுதான் சேவாசிரமம் தொடங்கினார்கள்.

## 1920, ஜூலை முதல் தேதி

ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி பேச்சு நடந்து கொண்டிருந்தது.

சுவாமி துரியானந்தர் : ஸ்ரீராமகிருஷ்ணர் திவ்ய மாதாவிடம், 'அம்மா, என்னைக் காமம் வசப்படுத்துமேயாகில் நான் தற்கொலை செய்து கொள்வேன்' என்று கூறி முறையிட்டார். எத்தனை உன்னதமான வார்த்தைகள்! ஒருமுறை இதுபற்றி அவருக்கு முன்கூட்டியே ஓர் எச்சரிக்கைச் சூசனை உண்டாயிற்று. அவர் மிகுந்த பய பீதியுடன் உடனே ஓடிப்போய், அம்பிகை பாதங்களில் தம்மைக் கிடத்திக்கொண்டார். அவரது மனப்பாங்கு எப்படிப்பட்டதெனில் அவருக்கு மட்டும் நிஜமாகச் சற்றேதும் காமஉணர்ச்சி உண்டாக்கியிருக்குமானால், தம் வார்த்தைகளின்படியே நிச்சயம் செய்திருப்பார். (அதாவது தற்கொலை செய்து கொண்டிருப்பார்.) சொன்ன சொல்லுக்கு அத்தனை ஸத்தியமாக ஒழுகியவர் அவர். இப்படிப் பேசக்கூடிய ஒருவர் விஷயத்தில் அன்னை இம்மாதிரியான உணர்ச்சித் தோதுக்கள் ஏற்பட ஒருநாளும் அனுமதிப்பதில்லை. இவ்விஷயத்தில் தீர்மானமான உறுதி கொண்டு நிம்மதி பெறுவாயாக. இப்பேர்ப்பட்ட திட சங்கற்பம் ஒருவனுக்கு இருப்பின் அவன் திண்ணமாக லட்சியத்தை அடைந்து விடுகிறான். ''காமாதி தோஷரஹிதம் குரு மானஸம்ச''[1] 'மனதைக் காமம் முதலாய தோஷங்கள் இல்லாமற் செய்வாயாக!' — எப்பேர்ப்பட்ட அழகான உணர்ச்சி!

முதுமைப் பருவத்தில் காமவசப்படுவது பயங்கரமன்றோ? இப்படிப்பட்ட ஆசைகள் முதுமையில்தான் முன்னைவிட வலுவாயுள்ளன என்றும் சொல்பவர்கள் இருக்கிறார்கள். அப்போது புலன்களின் சக்தி குறைந்திருந்தும் உணர்ச்சி வேகம் மட்டில் இருக்கும். இது ஒரு பெரிய சித்திரவதை இல்லையா? அதுவுமன்றி, அந்தப் பருவத்தில் ஒருவர் கட்டுப்பாட்டுச் சக்தியையும் பெருமளவு இழந்திருப்பார்.

நல்லது; இந்தக் காமம் என்பதுதான் என்ன? அது மனத்தின் ஒரு வேலைத்தனமேயன்றோ?

யாரோ ஒருவர் : அது ஓர் இந்திரிய ஸௌக்கியம் என்றே தெளிவாகத் தோன்றுகிறது.

சுவாமி துரியானந்தர் : அதற்குப் பின்பலமாக ஒரு மனத்தத்துவ நுட்பம்இருக்கத்தான் வேண்டும். அது என்ன என்பதே கேள்வி. ஒருமை உற வேண்டும் என்ற ஆசைதான் அது. அதாவது, காமம் என்பதும் (ஒன்றிவிட வேண்டும் என்ற திவ்யமான) அன்பின் ஓர் அம்சம்தான். ஆனால் மக்கள் தவறான மார்க்கத்தில் போய் விடுகிறார்கள். அவர்கள் ஸ்தூலத்தில் ஆரம்பிக்கிறார்களாதலால், இவ்வுணர்ச்சியை சுத்த வஸ்துவாம் [சூட்சுமமான] இறைவனிடம் கொண்டு சேர்க்கத் தவறி விடுகிறார்கள். ஆயினும், சண்டிதாசரைப் போல ஒரு சிலர் இதன் வழியாகவே சாட்சாத்காரத்தை எய்தியிருக்கிறார்கள்.[2] நீங்கள் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். ''ஒரு வண்ணாத்தியே ஆயினும் யௌவன ராதையின் மூர்த்தமே இவள்! தன்னிடம் காமத்தின் கறை சற்றுமில்லாதவள்.''[3] தன்னிடம் காமத்தின் கறை சற்றும் இல்லாதவள்—எத்தகைய கருத்து! வில்வமங்களரைப் பற்றியும் துளசிதாசரைப் பற்றியும் நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்களே! துளசிதாசர் பெண்டாட்டி தாசராக இருந்தவர்தாம். அவரது மனைவி பிறந்தகம் செல்லதுளசிதாசரும் பின் தொடர்ந்தார். அருவருப்படைந்த மனைவி, 'இதில் தினையளவேனும் இறைவனிடம் அன்பு வைப்பீராயின் விரைவிலேயே அவரை நேரில் அநுபவித்து விடுவீர்களே!' என்றாள். உடனே அவரது விவேகசக்தி உசுப்பி எழுப்பப்பட்டது. அவரைப் போன்ற 'முத்திரை பெற்றவர்கள்' இதுபோன்ற அற்பக் காரணங்களிலிருந்து எழுச்சி பெற்று விடுகிறார்கள். அன்பும்

* சுவாமி துரியானந்தர் இச்சமயம் காசியிலுள்ள ராமகிருஷ்ண சேவாசிராமத்தில் இருந்து வந்தார்.

1. இது துளசிதாசர் வாக்கு.

2. சண்டிதாசர் : வங்கக் கவிதையின் ஆதி பிதாக்களுள் ஒருவர். களவுக் காதலையே தியானத்தின் மூலம் ஆதரினமான சுத்தப் பிரேமை(பக்தி)யாகப் பக்குவப்படுத்தி, பகவத் சாட்சாத்காரத்தில் முடிக்கும் ஒரு வைஷ்ணவ சாதனா மார்க்கத்தைப் பின்பற்றியவர்.

3. இது தமது காதலியைப் பற்றிச் சண்டிதாசரின் கூற்று.

காமமும் மிகவும் தொடர்புடைய இரு விஷயங்கள். அதனாலேயே ஸ்ரீராமகிருஷ்ணர், 'காமம் குருடானது ஆனால் அன்பு தூயது, ஒளி வாய்ந்தது; என்று சொல்வது வழக்கம். உன் காதலி அல்லது காதலனை மானுடமாகவே நீ கருதினால் அது காமம்; அவளில் அல்லது அவனில் உள்ள கடவுளை நீ கருதுவாயாகில் அதுவே அன்பு.

யாரோ ஒருவர் : நல்லது, தொடக்கத்தில் கோபிகைகளுக்குக் கடவுளைப் பற்றிய எண்ணம் ஏதுமின்றி, அவர்கள் ஸ்தூலத்தில் பற்றுடன்தான் ஆரம்பித்தனர் இல்லையா?

சுவாமி துரியானந்தர் : அப்படியில்லை, பாகவதத்தின்படி வெகு ஆரம்பத்திலிருந்தே கண்ணனில் உள்ள கடவுளைக் கருதியவர்களாகத் தான் கோபிகைகள் இருந்திருக்கிறார்கள் என்று அவர்களுடைய விண்ணப்பத்திலிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம். கோபிகைகள் கண்ணனை அணுகியபோது அவர் அவர்களைப் போகுமாறு சொல்ல அவர்கள், 'நாங்கள் எங்கள் பதி, பிதா, புத்திரர், பந்துக்கள், மித்திரர் மற்றும் ஸகலத்தை யும் விட்டு உன்னிடம் வந்திருக்கிறோம். வேறு போக்கிடம் ஏதுண்டு? ஒவ்வொன்றுக்குள்ளும் அந்தராத்மனாக இருப்பவன் நீயே அல்லவா' என்று கேட்டிருக்கிறார்கள்.

ஸ்ரீகிருஷ்ணனிடமே பூரணமாக மனதை நிலை நாட்டும் தன்மையைக் கோபிகைகள் அறிந்திருந்தனர். எந்த ஒரு தனி வஸ்துவிடமும் மனம் மையப் பட்டு நின்றுவிட்டால், அங்கே ஈச்வர பாவனை வெளியாகிவிடும். காமம், 'குரோதம், பயம்-பாசம்-இவற்றில் எதுவும் மனதை ஒரு மையத்தில் நிறுத்தச் செய்ய இயலும். காமம்—கோபிகைகள் விஷயத்தில் போல; குரோதம் — கம்ஸன் போல; பயம்-சிசுபாலன் போல; பாசம்- அன்னை யசோதை போல; இப்படியே இன்னும் பல.

காமம் க்ரோதம் பயம் ஸ்நேஹம் ஐக்யம் ஸௌஹ்ருதம்
ஏவ ச
நித்யம் ஹரௌ விததோ யாந்தி தந்மயதாம் ஹி தே *

'காமம், கோபம், அச்சம், பாசம் உள்ள ஒற்றுமை நட்பு-இவற்றில் ஒன்றை இறைவனிடம் எக்காலும் பேணி வளர்ப்போர் நிச்சயமாக அவனிடமே மன மையப்பட்டு அவன்மயமாகிவிடுகின்றனர்.' ஆனால் மனம் பரிபூரணமாகப் பரிசுத்தமாக இருந்தாலொழிய இது நடக்கமுடியுமா? அதைப்பற்றி ஒருபோதும் நினைக்காதே! ..

அன்பு என்று இருந்தால், அவ்வன்புக்கு இலக்கான ஒரு வஸ்துவும் இருக்க வேண்டும். பசி இருக்கிறது; ஆனால் அதைப் போக்க உணவு இல்லை என்பதாக ஒருபோதும் நிகழுவதில்லை.

* பாகவதம் 10-29-15

## மனுஸ்மிருதியின் சில கருத்துக்கள்

ஒருவன் உண்மையே பேசவேண்டும். மனதிற்கு இன்பம் அளிப்பதையே பேச வேண்டும். ஆனால் மனதிற்குப் பிடிக்காத உண்மையைப் பேசக் கூடாது. மனதிற்கு மகிழ்ச்சி அளிப்பதாயினும் பொய் பேசக் கூடாது.— இதுதான் மூலாதாரமான விதியாகும்.

நீதிநெறியுடன் நடந்து கொள்ளாதவனோ, பொய் பேசிச் செல்வம் திரட்டுபவனோ பிறருக்குத் துன்பத்தைக் கொடுப்பதில் எப்போதும் மகிழ்பவனோ இந்த உலகத்தில் ஒரு காலத்திலும் சந்தோஷமாக வாழமுடியாது. நேர்மையற்றவர்களால் அவனுக்குத் துன்பம் நேர்ந்தால்கூட அவனது மனம் நேர்மையான வழியிலிருந்து திரும்பி விடக் கூடாது. அவ்விதம் இருந்தால், பாவிகளும் நேர்மையற்றவர்களும் வீழ்ச்சியடைவதை அவன் சீக்கிரத்தில் காண்பான். நேர்மையின்மையின் வினை உடனே தெரிந்து விடாது. நேர்மையற்றவர்களின் வம்சத்தையே அது சிறிது சிறிதாக வீழ்த்திவிடும்.

**ஸ்ரீமத் சுவாமி விவேகானந்தரின் 118-ஆவது ஜயந்தி விழா 1980 ஜனவரி 9-ஆம் நாள் புதன்கிழமை வழக்கம்போல் விமரிசையாக சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும்.**




# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1980 ஜனவரி மாத நிகழ்ச்சிகள்

ஸ்ரீமத் சுவாமி விவேகானந்த ஜயந்தி விழா :

9-1-80 புதன் ஜன்மதிதி : விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன
(காலை 5 மணி முதல் 11-30 மணி வரை)

காலை 8-30 மணி சென்னைக் கடற்கரையில் நிறுவப்பட்டுள்ள சுவாமி விவேகானந்தரின் திருவுருவச் சிலைக்கு மலர்மாலைகள் அணிவித்தல்.

மாலை 7 மணி சுவாமி விவேகானந்தர் பற்றிய சொற்பொழிவு (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)

13-1-80 ஞாயிறு பொது விழா நிகழ்ச்சிகள்
மாலை 5 மணி முதல் 5-30 வரை பக்திப் பாடல்கள்
மாலை 5 மணி முதல் 7 மணி வரை பொதுக்கூட்டம்
தலைவர் : சுவாமி தபஸ்யானந்தர் பேச்சாளர் : திரு. எஸ். மணவாளன்

சத்சங்கம் : ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 8 மணி வரை
4 மணி முதல் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (6-1-80 & 27-1-80)
4-30 மணி வரை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (20-1-80)
மாலை 4-30 மணி முதல் 5-30 மணி வரை சொற்பொழிவு (தமிழ்)

6-1-80 1. ஸ்ரீமத் பாகவதம் -- திரு 'அண்ணா' சுப்ரமண்யம்
20-1-80 2. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்— திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்
27-1-80 3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருசுவாமி சாஸ்திரிகள்

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் தலைப்பில் ஜனவரி 6, 20, 27 ஆகிய தேதிகளில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

வாரநாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

| | |
|---|---|
| திங்கள் | ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள்வாக்கு—சுவாமி அமிர்தானந்தர் |
| செவ்வாய் | நாரத பக்தி சூத்திரம் — சுவாமி கபீரானந்தர் |
| புதன் | கேனோபநிஷத் — சுவாமி அமலாத்மானந்தர் |
| வியாழன் | மகாபாரதம் — திரு 'அண்ணா' சுப்ரமண்யம் |
| வெள்ளி | அன்னை ஸ்ரீசாரதா தேவியார்—சுவாமி கமலாத்மானந்தர் |
| சனிக்கிழமை | அத்யாத்தும ராமாயணம்—திரு பி. ராமகிருஷ்ணன் (5-1-80) |

விசேஷ தினங்கள்:

27-1-80 ஞாயிறு : அந்தர்யோகம் (சாதனை தினம்)

14-1-80 & 27-1-80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

1-1-80 ஸ்ரீமத் சுவாமி துரியானந்த ஜயந்தி
6-1-80 மாலை 7 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ண நாம சங்கீர்த்தனம்
19-1-80 ஸ்ரீமத் சுவாமி பிரம்மானந்த ஜயந்தி—ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் (மாலை வழிபாட்டிற்கு முன்பு)
20-1-80 மாலை 7 மணிக்கு ஸ்ரீசாரதா நாம சங்கீர்த்தனம்
21-1-80 ஸ்ரீமத் சுவாமி திரிகுணாதீதானந்த ஜயந்தி
31-1-80 ஸ்ரீமத் சுவாமி அத்புதானந்த ஜயந்தி

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

